# செந்தமிழ்ச் செல்வி



## உள்ளுறை




சிலம்பு-ருரு ] வள்ளுவர் ஆண்டு—உ0கஉ, சித்திரை . May '81 [பரல் - க

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---




"செந்தமிழ்ச் செல்வி"

ஆண்டுக் கையொப்பம்

(Subscription Rate)

உள்நாடு ரூ. 12 00 வெளிநாடு ரூ. 20 00

ஆயுள் கையொப்பம்

உள்நாடு ரூ 120 00 வெளிநாடு ரூ. 200 00

# திருக்குறட் பேரவை

## முகவை மாவட்ட மாநாடு

---

இராசபாளையத்தில் திருவள்ளுவர் மன்றச் சார்பில் இம் மாநாடு 1981 மேத் திங்கள் 30, 31 ஆகிய இருநாட்களிலும் சீரோடும் சிறப்போடும் நடைபெறும். திருக்குறள் ஆராய்ச்சிக் கட்டுரைப் போட்டி நடைபெறும். 'திருக்குறள் காட்சி' சென்னை மறைமலையடிகள் நூல்நிலையத்தாரால் விழா நாட்களில் அமைக்கப்பெறும்.

தமிழ் மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் பர். வ. சுப. மாணிக்கம், முதுபெரும் புலவர் அ. நடேசனார், பர். சிலம்பொலி செல்லப்பனார், பெரும் புலவர் பா. நமசிவாயம், திருவாட்டி காந்திமதி முதலிய அறிஞர் பெருமக்கள் உரை வழங்குவர்.

சென்னை
12—5—1981

இதழாசிரியர்

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

சிலம்பு ௫௫ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௨, சித்திரை மே 1981 | பரல் ௯

## கழக மணிவிழா

தமிழ் நூல் வெளியீட்டுத் துறையில் முன்னணியில் உள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மணிவிழாவை இன்னும் ஓரிரு திங்களில் சிறப்பாகக் கொண்டாடுதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

தமிழ்நூல் வெளியீட்டுத் துறையில் கூட்டுப் பங்கு நிறுவனம் ஏதும் சிறப்பாக நடைபெறாத நிலையில், தமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் இல்லாத சூழ்நிலையில் கழகம் 1920 இல் தோன்றி அறுபது ஆண்டுகள் தொடர்ந்து பணியாற்றி வந்துள்ளது பாராட்டுதற்குரியது. அதுவும் கழக ஆட்சியாளர் 'செந்தமிழ்ச் செல்வர்' உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் பார்வையின் கீழே இக் கழகம் தொடக்க முதல் வளர்ந்து வந்தது வியந்து மகிழ்தற்குரியது. ஆட்சியாளர் அவர்தம் தமையனாரான திரு வருட்டிரு திருவரங்கம் பிள்ளை அவர்கள் கழகம் தோன்றுதற்குக் காரணராக இருந்தார். அவர்க்குத் துணையாக நடைமுறைப் பணிகளனைத்தையும் தொடக்கமுதல் பொறுப்பேற்றுப் பார்த்து வந்தவர் ஆட்சியாளர் அவர்களேயாவர்.

. மேலை நாட்டினரும் வியந்து போற்றும் வகையில் செவ்விய முறையில் தமிழ்நூல்களை வெளிக்கொணர்ந்த கழகத்தின் பணி அளவிடற்கரியது. தமிழ் இலக்கிய இலக்கண நூல்களை உரையுடன் செம்மையாகப் பதிப்பித்ததனால் தமிழ்மொழியின் பெருமை மேலை நாட்டிலும் நன்கு பரவியது. பல்வேறு நாடுகளில் தமிழ்ப் பல்கலைக் கழக அளவில் இந்நூல்கள் பயிற்றுவிக்கப்பெற்றன. தமிழ்நூல்களைப் படித்த ஆர்வத்தினால் தமிழ்ப் பண்பாடு, வரலாறு பற்றிய துறைகளில் மேனாட்டறிஞர்கள் ஈடுபட்டனர். உலகத் தமிழ் மாநாடுகள் கூட்டப்பெற்று, பலவேறு நாட்டறிஞர்கள் தமிழின் பெருமையை ஆயும் நிலையும் ஏற்பட்டுள்ளது.

சைவம், தமிழ் ஆகிய இரண்டையும் கழகம் தன் இரு கண்களாகப் போற்றி அவ்விரண்டின் முன்னேற்றத்திற்கும் தன்னாலான பணியை இடைவிடாது ஒல்லும் வகையானெல்லாம் ஆற்றிவந்துள்ளது. சைவத்தைப் பரப்புதற்கு அதன் இன்றியமையாத அடிப்படை நூல்களான பன்னிரு திருமுறைகளேயும் மெய்கண்ட சாத்திரம் என்னும் நூலினையும் கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் அழகிய பதிப்பாகக் கழகம் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தே வெளியிட்டு வருகின்றது. மற்றும் தாயுமானவர், பட்டினத்தார், இராமலிங்க அடிகள் போன்ற அருளாளர்களின் அருட்பாடல்களும் தெளிவாக விளக்கவுரைகளுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

தமிழ் இலக்கிய இலக்கண நூல்களுடன் வரலாறு, ஆட்சி முறை, அறிவியல், பொருளியல், மருத்துவம், இசை, வாழ்க்கை வரலாறு, குழந்தை இலக்கியம் போன்ற பலதுறைகளில் கழகம் நூல்களை வெளியிட்டு மைய, மாநில அரசுகளின் பரிசுகளைப் பெற்றுள்ளது.

நூல் வெளியீட்டுப் பணியுடன் நின்றுவிடாது மாநாடுகள் நடத்துதல், சொற்பொழிவு நூல்களை வெளியிடுதல், அரிய நூல்களின் காட்சிகளை ஆங்காங்கு அமைத்தல் போன்ற பெருஞ் செயல்களிலும் கழகம் ஈடுபட்டுள்ளது. தனித்தமிழியக்கத்தின் வளர்ச்சிக்காக மறைத்திரு மறைமலையடிகளார் வழிநின்று 'செந்தமிழ்ச் செல்வி' திங்களிதழை 55 ஆண்டுகளாக நடத்தி வருகிறது. மற்றும் ஊர்ப் பெயர் மாற்றம், தமிழ் ஆட்சி மொழியாதல், திருக்கோயில்களில் இறைவன் இறைவியர் பெயர் மாற்றம், தமிழில் மலர் தூவி வழிபடல் ஆகியவற்றிலும் கழகம் முன்னின்று பாடுபட்டுள்ளது.

அறப்பணி நோக்கத்தைத் தொடக்க முதல் கருத்தில் கொண்ட கழகம் அரிய தமிழ்நூல்களைப் பாதுகாத்து அறிஞர் பெருமக்கட்குப் பயன்படும்வகையில் உதவும்பொருட்டு, சென்னையில் மறைமலையடிகள் நூல்நிலையத்தையும் நெல்லையில் சிவஞான முனிவர் நூல்நிலையத்தையும் நடத்திவருகின்றது.

பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றம், நெல்லை நீலாம்பிகையம்மையார் தையற்கலைப் பள்ளி, நெல்லை குமரகுருபரர் குழந்தைப் பள்ளி போன்ற அறநிலையங்கள் கழகத்தின் தொண்டுப் பயிர் விளையும் தூய விளை நிலங்கள்.

இத்தனை அரும்பெரும் பணிகளை ஆற்றிவரும் கழகத்தின் மணிவிழா ஒரு நிலையத்தின் விழா மட்டுமன்று. தமிழ் மக்கள் அனைவருடைய ஈடுபாட்டையும் கொண்ட ஒரு பெரிய மொழியின் விழாவாகும். இவ் விழாவினை உலகெங்கணுமுள்ள தமிழ் பயிற்றுவிக்கும் பல்கலைக் கழகங்களும் தமிழ்ச் சங்கங்களும் ஆங்காங்கு

சிறப்பாகக் கொண்டாட வேண்டும். இது தமிழுணர்வு கொண்ட மக்கள் அனைவரும் இணைந்து கொண்டாட வேண்டிய விழாவாகும். தமிழகத்தின் தலைநகர் மட்டுமன்றிப் பேரூர்களனைத்திலும் கொண்டாடப்பெற வேண்டிய விழாவாகும்.

கழக மணிவிழாவை யொட்டி ஆட்சியாளர் வ. சு. அவர்கள் வாழ்க்கை வரலாறு கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன் அவர்களால் எழுதப்பெற்று அச்சாகி வருகிறது. விழாவில் அது வெளியிடப்பெறும்.

கழகப் பொன்விழாவில் இறைவனடியார் பெருமையை விளக்கும் 'பெரிய புராணச் சொற்பொழிவு மாநாடு' நடைபெற்றது. பெரியபுராணத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பான' Grand Epic of Saivism தவத்திரு சுத்தானந்த பாரதியார் அவர்களால் இயற்றி வெளியிடப் பெற்றது. 'திருத்தொண்டர் மாக்கதை' என்னும் தமிழ் நூல் சிறந்த முறையில் வெளியிடப்பெற்றது.

மணிவிழாவை யொட்டித் திருவிளையாடற் புராணச் சொற்பொழிவு மாநாடு நடத்துவதற்குத் திட்டமிடப்பெற்றுள்ளது. அதன் ஆங்கில மொழிபெயர்ப்பும் வெளியிடப்பெறும். இம் மொழிபெயர்ப்பையும் தவத்திரு சுத்தானந்த பாரதியார் அவர்களே ஆக்கித் தந்துள்ளனர்.

'கழக மணிவிழா மலர்' நம்நாட்டுப் பெருமக்கள், மேனாட்டறிஞர்கள் முதலானோர் வாழ்த்துரைகளுடன் இலக்கிய மணம் கமழும் வகையில் வெளியிடப்பெறுகிறது. கழகப் பணிகளுக்குதவும் வகையிலும் விழாவைச் சிறப்பாக நடத்துதற் பொருட்டும் பெரும் பொருள் தேவைப்படுகின்றது. கழகப் பணிகளில் ஈடுபாடு கொண்டுள்ள அன்பர்கள் அனைவரும் மணிவிழா மலருக்குத் தமக்குத் தெரிந்த வணிக நிறுவனங்களிடமிருந்து தம்மாலியன்ற அளவு விளம்பரங்களைத் தொகுத்துத்தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். உலகெங்கணுமுள்ள தமிழ்மொழி, இலக்கிய, பண்பாட்டுத் தொடர்பான அமைப்புகள், சங்கங்கள் போன்றவை ஆங்காங்கு மணிவிழாவைச் சிறப்பாகக் கொண்டாடுதல் வேண்டும்.

கழக மணிவிழா தமிழன்னைக்குத் தமிழ்ப் பெருமக்கள் எடுக்கும் விழாவாகும். தமிழ்மக்கள் ஒவ்வொருவரும் தத்தம் இல்லவிழாப்போல் எண்ணிக்கொண்டு தாமே கழகத்துடன் தொடர்பு கொண்டு மணிவிழா மிக்க சிறப்புடன் நடைபெற எல்லாவகையான உதவிகளையும் செய்தல் வேண்டும். தமிழக அரசும் தமிழக அரசியல் கட்சியினரும் தத்தம் கட்சி வேறுபாட்டினை மறந்து தமிழ் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தமிழன்னைக்கு எடுக்கும் இவ்விழாவில் ஒருங்கிணைந்து நின்று விழா வெற்றிபெற உதவ வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறோம்.

———

# மொழிஞாயிறு பாவாணரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியும்

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் ௯௫0ஆம் பக்கத் தொடர்ச்சி)

‘மொழிஞாயிறு பாவாணர்தம் பேராப் பெரும் பிரிவை எண்ணி நம் உடலமெலாம் வாயாக ஓயாது அழுதாலும் ஆவது ஒன்றும் இல்லை’ என்பது எவரும் அறிந்த உண்மையே.

‘அவர் வாழ்ந்த காலத்தில், அவர்தம் ஆக்கப் பணிக்கு அரசு ஏந்தாக இல்லாக் குறையை அவர் மறைவின் பின்னர்ப் பல சொல்வதாலும் அப் பெருமகனார்க்குப் பயனாவது ஒன்றும் இல்லை’ என்பதும் உண்மையே. ஆனால் அப் பகர்வும், அப் பகர்வு வழியே எழும் உணர்வும், உணர்வுடைய பெருமக்களின் உள்ளத்தில் ஊன்றித் தைத்து எதிர்கால உலகிலேனும், இத்தகு கெடுநிலை எய்தாமல் தடுக்க வழிவகை செய்யும் என்னும் கழிபேரார்வமே இத் தொடரை எழுதத் தூண்டுவதாம்.

“என்ன செயலைச் செய்துவிட்டேன் என்று பின்னே வருந்து மாறான செயலை ஒருவன் செய்யாதிருப்பானாக; ஒருவேளை அதனைத் தவறிச் செய்துவிட்டான் எனினும், அத் தவற்றை அவன் மீண்டும் செய்யாதிருப்பானாக; அதுவே எவ்வுயிர்க்கும் நன்மையாம்” என்பது வாய்மொழி. இதனை,

*“எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்*
*மற்றன்ன செய்யாமை நன்று”*

என்னும் அது. ஆதலால், இதனைப் பட்டறிவு தந்த படிப்பினையாகக் கொண்டேனும், எதிர்கால ஆக்கப் பணிகளை அறிவுடையோரும் ஆள்வோரும் செய்தல் இன்றியமையாதது.

ஆள்வோர் கருத்தில், பாவாணர் இயக்ககம் இயங்குவதுபற்றி இரண்டு கருத்து இல்லை. “கட்டாயம் அத்துறை தொடர்ந்து செயல் படும். அகர முதலியை முடித்து வெளியிடத்தக்க ஏந்துகளைச் செய்வோம்” என்று அவர்கள் பாவாணர்க்கு நிகழ்ந்த இரங்கல் கூட்டங்களில் பகர்ந்த உரைகள் பசுமையாக உள. அதனைக்

காலம் தாழ்த்தாமல் முற்றுகச் செய்தல், அப் பெருமகனுர்க்குச் சீரிய நினைவுப் படைப்பாக அமையும்.

"செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும்"

என்று போற்றத்தக்க புகழ்நெறி காட்டுவார் பொய்யாமொழியார். அதன்படி செய்தக்கவற்றைச் செவ்வையாக எண்ணித், துணிந்து செயலாற்றி நிறைவுறுத்தல் வேண்டும். அதற்குரிய வழிமுறை வாய்ப்பைக் குறிப்போம்:

அகரமுதலித்துறை செவ்விதிற் கடனாற்றுதற்குக் கீழ்க் காணும் ஐம்பெருங் குழுக்கள் இன்றியமையாதவை. அவை (க) மேலாண்மைக் குழு (உ) அகக் குழு (௩) அகப்புறக் குழு (௪) புறக் குழு (ரு) அலுவல் குழு என்பன.

(க) மேலாண்மைக் குழு: அகர முதலியின் நடைமுறைச் செயல், நிதியுதவி, பிற ஏந்துகள் ஆகியவற்றை ஆய்ந்து உதவி செய்தற்கு முற்றிலும் பொறுப்புடையது இம் மேலாண்மைக் குழு. இக் குழு, குறைந்தது முத் திங்களுக்கு ஒரு முறையேனும் கூடி அகரமுதலித் திட்ட நடைமுறை உதவி, செயல் வளர்ச்சி ஆகியன பற்றி ஆராய்ந்து, வேண்டும் உதவிகளை உடனுக்குடன் செய்தல் வேண்டும். இக் குழுவில் தமிழக முதல்வர், கல்வித்துறையமைச்சர், நிதித்துறையமைச்சர், கல்வித்துறைச் செயலர், நிதித்துறைச் செயலர், அகர முதலி இயக்கக இயக்குநர் ஆகிய அறுவரும் இடம் பெறல் வேண்டும். இக் குழுவின் ஒருமித்த ஆர்வச் செயலாண்மையே, கடந்த நாளில் அகர முதலித் துறைக்குத் துணை நிற்காத இடைப்படு தடைகளை உடைத்தெறிந்து உண்மையான உதவிகளை உடனுக்குடன் செய்தற்கு உதவும். இல்லாக்கால் "பழையபடி பழையபடியே" என்பதாகவே இயக்கக நிலை இருக்கும்!

(உ) அகக் குழு: அகக் குழு என்பது களப்பணிக் குழுவாகும். அகரமுதலியின் கூர்த்த மூளைப்பகுதியாகவும், முனைப்பான உழைப்புப் பகுதியாகவும் அமையத்தக்கது இக் குழுவேயாம். இக் குழு, முப்பகுதிப்படும் பணிகள் புரிதற்கு ஏற்பத் தேர்ந்து தக்கோரை அமர்த்தம் செய்து செயலுறுத்தப்பெறவேண்டும். அவை: (1) தொகுப்புப் பகுதி (2) சொற்பிறப்புக் காண் பகுதி (3) பதிப்பாண்மைப் பகுதி என்பனவாம்.

(1) தொகுப்புப் பகுதி: இதுகாறும் வெளிப்பட்டுள்ள பல்வேறு அகரமுதலிகளிலும் இடம்பெருதனவாக உள்ள சொற்களையெல்லாம் தொகுத்தல், அவற்றை அகர முதலியில் உள்ள சொற்

களுடன் ஒழுங்குற இணைத்தல், பொருள் வரைதல், மேற்கோள் இடம் சுட்டல் ஆகியவை தொகுப்புப் பகுதியின் பணிகளாகும். ஏறத்தாழ ஒரிலக்கம் சொற்களே இடம்பெற்றுள்ள அகர முதலியில் இன்னும் இணைக்க வேண்டிய சொற்கள் ஏறத்தாழ ஈரிலக்கம் உள எனின் வியப்பாகத் தோன்றலாம். ஆனால் இப் பணியில் ஊன்றினர் உண்மை காண்பர்.

(2) சொற்பிறப்புக் காண் பகுதி: தொகுப்புப் பகுதியால் தரம் பெற்ற கைப்படிவங்களில் உள்ள சொற்களை ஆய்ந்து, 'மாசு போக்கி மணி' கொள்ளலும், மணிச்சொற்களுக்கு வேர்மூலங் காட்டலும், அதன் கிளைப்பு தழைப்பு ஆகியவற்றை விளக்கலும், பொருள் விளக்கம், ஒப்பீடு திரவிடச் சொல், கீழையாரியச் சொல், மேலையாரியச் சொல் ஆயவற்றொடு இயைபுறுத்தலும் ஆகிய அரும் பணி செய்தல் சொற்பிறப்புக் காண் பகுதிக்கு உரியதாம். ஆகலின். அகக் குழுவின் அச்சாணியாய் அமைவது இச் சொற்பிறப்புக் காண் பகுதியேயாம்.

(3) பதிப்பாண்மைப் பகுதி: சொற்பிறப்புக்காண் பகுதியால் தரப்பெற்ற கைப்படிவங்களைத் தட்டச்சுச் செய்தல், அச்சிடல், மெய்ப்புப் பார்த்தல், கட்டடஞ் செய்தல், அச்சிட்டவற்றைப் பேணல், விற்பனை செய்தல், ஆகிய நடைமுறைப் பணிகள் இப் பதிப்பாண்மைப் பகுதியைச் சேர்ந்தவையாம்.

(௩) அகப்புறக் குழு: இக் குழு அகப்பணியாம் களப்பணியும் புறப்பணியாம் வெளியிடப்பணியும் தக்காங்கு செய்தற்கு உரியது. இதன் பணி முற்றுகச் சொற்றொகுப்பே ஆகும். தானும் இயன்ற வரை முயன்று சொற்றொகுத்தல், புறக்குழுவைத் தூண்டிச் சொற்றொகுப்பைப் பெருக்கி ஒழுங்குறுத்தல் என இதன் பணி இரு நெறிப்படும். உள்ளும் புறம்பும் ஒத்த ஆர்வத்தால் இவர்கள் செய்யும் பணியே அகர முதலிச் சொற்பெருக்கத்திற்கும் விரிவாக்கத்திற்கும் விழுமிய துணையாய் அமையும். இடந்தொறும் சென்று சொற்றொகுத்தலும், துறைதொறும் சென்று சொற்றொகுத்தலும் பெருங் கடப்பாடாக அமைந்த இவர்களுக்கு ஊர்தி வாய்ப்புக் கட்டாயம் வேண்டும். திரவிட மொழிகள் வழங்கும் மாநிலங்கள் மலைக் காடுகள் ஆகியவற்றுக்கும் இவர்கள் சென்று பணிசெய்தலும் இன்றியமையாதது. அறிவின் முக்கூறுகளுள் ஆழ்தலும் நுணுக்கமும் அகக் குழுவைச் சார்ந்தவை என்றால் அகலுதல் அகப்புறக் குழுவைச் சார்ந்ததாகும்.

(௪) புறக் குழு: அகப்புறக் குழுவின் ஆக்கப் பணிக்கு அருந் துணையாய் அமைந்தது புறக்குழுவாகும். இக் குழு பொருள் வருவாய்

கருதாமல் பொதுநலங் கருதிப் புலமைப் பயன் காணும் புகழ்க் குழுவாகும். தனித் தமிழ்ப் பற்றும், அரும்பணிக்கு நாமும் அணுக்கராய்க் கடமை யாற்றல் பிறவிப்பேறு என்று கருதும் பெருங்குணமும், தன்னிலே முகிழ்த்த தணியா உணர்வும் கொண்டதாக இக் குழு அமைந்து பணியாற்றுதல் அகர முதலியின் வெற்றிக்கு விழுத்துணையாகும். ஊர்தொறும், வட்டாரந்தொறும், துறைதொறும் தக்கார் முன்வந்து தேனீக்கள் பூத்தொறும் தேன் தொகுத்துக் கூட்டில் சேர்ப்பது போல அகப்புறக் குழுவில் சேர்ப்பாரயின், இக் குழுவின் பணியால் அகரமுதலி மருந்தும் விருந்துமாய் மாப்பயன் விளைக்கும் எனல் உறுதி. வரம்பிலாப் பணிசெய்ய வாய்த்த இக்குழு உறுப்பினர் எண்ணிக்கைக் கும் வரம்பு இல்லை. ஒரோ ஒரு சொல் தொகுப்பாரும், ஓராயிரம் ஈரா யிரம் எனச் சொற்கள் தொகுப்பாரும் இக் குழுவின் உறுப்பினரே. அகப்புறக் குழுவால் கேட்டுக்கொள்வாரும், கேளாமலே முன் வந்து—பொது அறிக்கை கண்ட அளவில்—பணிசெய்வாரும் ஆகிய இருதிறத்தாரும் இக்குழு உறுப்பினரே. இவர்களுள் அரும் பணிசெய்வார்க்குப் பாராட்டும், அன்பளிப்பும் வழங்குதலும் வேண்டத்தக்கனவே.

(ரு) அலுவல் குழு: அகரமுதலி இயக்கக அலுவலக நடை முறைக் குழு இதுவாகும். மேலாளர், எழுத்தர், தட்டச்சர், ஏவலர், ஊர்தி ஓட்டுநர் இன்னோர் இக் குழுவைச் சார்ந்தவர்.

இவ்வை வகைப் பணிக்குழுவுடன் 'கருத்துரைக்குழு' என ஒன்றும் வேண்டத்தக்கதே. அக் குழு மேலாண்மைக் குழுவால் அவ் வப்போது கூட்டிக் கருத்துப் பெறுதற்கும், எழுத்து வழியாகக் கருத்துப் பெறுதற்கும் உரியது. அகர முதலித் துறையில் தேர்ச்சி யுடைய புலமையாளர்கள், படைப்பாளிகள், பல்கலைக் கழகங்களின் தமிழியல் துறைத் தலைவர்கள், தமிழ் வளர்ச்சித் துறை, தமிழ் ஆட்சி மொழித் துறை, தொல்பொருள் துறை, ஆவணக்காப்பகத் துறை ஆகிய துறைகளின் இயக்குநர்கள், உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், உலகத்தமிழ்க் கழகம் இன்னபல அமைப்புகளின் பேராளர்கள் ஆகியோர் இக்கருத்துரைக் குழுவில் இருந்து வழி காட்டுதற்கும் உதவுதற்கும் வேண்டிக்கொள்ளப்பெறுதல் வேண்டும். இவ்வாறெல்லாம் பகுதியாகவும், தொகுதியாகவும் பணிசெய்தே, இவ்வரும்பெரும் அகரமுதலிப் பணியை முற்றுவித்தல் கூடுவதாம்.

அகரமுதலி இயக்கக அகக் குழு, அகப்புறக் குழு என்னும் களப் பணிக் குழுக்கள் இரண்டனுள்ளும் அகக் குழுவே பொறுப்பு முதன்மையுடையது என்பதை முன்னரே குறித்தோம். அக் குழுப் பணிக்கு அமர்த்தம் பெறுவார் தகுதி என்பது பணித் தகுதியே

யன்றி, மேல்நிலைப் பட்டம், பதவித் தகுதிகளோ, அரசுத்துறை தனித்துறை, பொதுத்துறை என்னும் பணித்துறைத் தகுதிகளோ முதன்மையானவையல்ல அமர்த்தம் பெறத்தக்க துறைகளின் தேர்ச்சியிலும் திறத்திலும் ஈடு இணையற்றவராக இருத்தலே அடிப்படை; எஞ்சியவை துணைத் தகுதிகளேயாம்.

"சொற்பிறப்பியல் (Etymology) ஒரு தனி மொழிநூற்றுறை என்பதைப் பலர் உணர்வதில்லை. புலவர் தேர்வு தேறிய மட்டில் அல்லது கல்லூரி யாசிரியப் பதவி பெற்றமட்டில் எல்லாச் சொற்கும் வேர்காணும் ஆற்றல் தமக்கு வந்துவிட்டதாகப் பலர் கருதிவிடுகின்றனர்.

"இனி, தமிழ்ப் பேராசிரியராக, அவருள்ளும் பல்கலைக் கழகத் தலைமைத் தமிழ்ப் பேராசிரியராக, இருப்பவரோவெனின், மேலையறிஞர் எழுதியுள்ள மொழிநூலைக் கற்றவுடன் தம்மையும் மொழிநூல் ஆசிரியராக அல்லது அதிகாரிகளாகக் கருதிக்கொள்கின்றனர். கல்வி வேறு ஆராய்ச்சி வேறு என்பதை அவர் அறிகின்றிலர்.

"சொற்பிறப்பியல் என்பது சொல்லின் உண்மையான வரலாற்றைக் கூறுவதேயன்றி ஒலிமுறை தழுவியும் உன்னிப்பாகவும் குறிக்கோள் கொண்டும் கூறுவது அன்று. இதை Etymology என்னும் பெயரே உணர்த்தும். GK. etumos = true; etumon = original form of a word; etumologia—etymology = account of facts relating to formation and meaning of word.

'சொற்பிறப்பியல் என்பது ஒரு தனி அறிவியற்றுறை யாதலின், அதற்குரிய நெறிமுறைகளை யெல்லாம் அறிந்தபின்னரே சொற்கட்கு வேர்காணும் ஆராய்ச்சியில் ஈடுபடுதல் வேண்டும்" என்னும் பாவாணர் உரை, அத்துறைக்குரியவர்களின் தகுதியை விளக்குவதாகும். இத்துறையில் அமர்வார்க்கு இன்றியமையா அறிவுப் புலம், பண்பு நலம் பற்றியும் பாவாணர் குறிக்கிறார்:

"1. இலக்கண அறிவுடைமை 2. மொழி நூலறிவும் மொழியாராய்ச்சியும் 3. சொல்லியல் அறிவுப்பேறு 4. அயன் மொழியறிவு 5. பெரும்பால் தமிழ்ச் சொற்பொருளறிவு 6. தமிழ் ஒலியியல்பு அறிதல் 7. எழுத்துகளின் திரிபுகளை அறிதல் 8. சொற்றிரிபு அறிதல் 9. சொற்களின் திருந்திய வடிவறிதல் 10. பலபொருள் ஒருவடிவுச் சொற்களைப் பகுத்தறிதல் 11. சொற்களைச் செவ்வையாய்ப் பிரித்தல் 12. பொருள்களின் சிறப்பியல்பு அறிதல் 13. பொருள் வரிசை அறிதல் 14. ஒப்புமையமைப்பு (Analogy) அறிதல் 15. வரலாற்றறிவையும் ஞாலநூல் அறிவையும் துணைக்

கோடல் 16. இடுகுறி தமிழில் இல்லையென்றுணர்தல் 17. பகுத்தறிவைப் பயன்படுத்தல் 18. அஞ்சாமை 19. நடுநிலை 20. பொறுமை'' என்பவை அவை.

பாவாணர் பாவாணரே; அவர்க்கு ஒப்பாகச் சொற்பிறப்புக் காணவல்லார் இவர் என இந்நாள் உரைக்க ஒருவர் இலர். அதனைக் கருதி அத்துறையையே மூடிவிடக் கருதுதலும், அவ்வாறு கூறுதலும் சால்பு ஆகாது. பாவாணரால் விளைந்த அறிவுப்புலம் மேலும் வளர்தற்கும் வளப்பாதற்கும் அத்துறையின் இயக்ககம் இன்றியமையாதது.

''நெறியறிந்து ஆரஅமர ஆராயின் இற்றைத் தமிழ்ச்சொற்களுள் நூற்றிற்கு எழுபத்தைந்திற்கு வேர்காண இயலும்'' என்று பாவாணர் இயம்புவது கூடாவிடினும், நூற்றிற்கு ஐம்பது அறுபது சொற்களுக்கேனும் வேர்காண வாய்ப்பு உண்டாகுமே. கைதேர்ந்த சமைப்பாளர் இல்லையென்று சமையலையே நிறுத்திவிடல் பொருந்தாத்தனமாதல் போல் ஆமென அமைக.

இனி, அகரமுதலி இயக்கக அடிப்படைப் பணிக்குரிய செயல்கள் சில உள. அவை:

1. பாவாணர் தொகுத்துவைத்துள்ள நூற்றொகுதிகளையெல்லாம் அரசு விலைதந்து வாங்கி இயக்கக நூல்நிலையப் பயனுக்கு ஆக்குதல்.

2. பாவாணர், அகரமுதற் சொல்லுக்கு வரைந்துள்ள முதன் மடல முதற் பகுதியை உடனே அச்சிடுதல்.

3. பாவாணர் இயற்றியுள்ள நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றில் எல்லாம் இடம்பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும், அவர் வேர்கண்டுள்ள வகையில் தொகுத்து அகரப் படுத்துதல்.

4. அகரமுதலி இயக்ககத்தை நிலையான அமைப்பாகச் செய்தல்.

இங்கே குறிக்கப்பெற்றவை முற்றமுடிந்த கருத்தென எவரும் கொள்ள வேண்டுவதில்லை. ஆனால் இக் கட்டுரையாளன், அகரமுதலிப் பணியில் பெற்றுள்ள பட்டறிவும், பாவாணர் இயக்கக அணுக்கமும் உடைமையால் எண்ணி எழுதப் பெற்றவையாம்.

''தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.''

———

# சங்க நூல்களில் கடுந்தேறு எனும் குளவி

## (Polistes Rebraeus)

[திரு. பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

சங்க நூல்களில் ஒருவகைக் கடுங்குளவிக்குக் 'கடுந்தேறு' என்ற பெயர் வழங்கியுள்ளது. இக் குளவி கூடுகட்டி, கூட்டின் வாழ்க்கையைப் பின்பற்றுவதாகும்.

*"செறுவினை மகளிர் மலிந்த வெக்கைப்*
*பருஉப்பக டுதிர்த்த மென்செந் நெல்லின்*
*அம்பண வளவை யுறைகுவித் தாங்குக்*
*கடுந்தே றுறுகிளை மொசிந்தன துஞ்சும்*
*செழுங்கூடு கிளைத்த இளந்துணை மகாஅரின்*
*அலந்தனர் பெருமநின் னுடற்றி யோரே"*

(பதிற்றுப்பத்து 8 : 71. 3 - 8)

"செந்நெல்லை மரக்காலால் அளத்தற்கு உறையாகக் குவித்தாற் போல மொசிந்திருந்த குளவியினம் இருந்த கூட்டைக் கலைத்த இளஞ்சிறுர்போல, உன்னேடு மாறுபட்ட பகைவர் துன்ப முற்றனர்" என்று பதிற்றுப்பத்தில் எட்டாம்பத்து கூறியுள்ளது. 'குளவிக் கூட்டைக் கலைத்தாற்போல' என்ற பழமொழி தமிழில் வழங்குகின்றது. இதே பழமொழி மலையாளத்தில் 'கடந்நல் கூடின்ன கல்லெடுத தெறிக' என்று வழங்குகின்றது. ஆங்கிலத்திலும் 'To arouse a nest of hornets' என்று இதே முறையான பழமொழி பகைவரைத் தூண்டிவிடுவதைக் குறித்து வருகின்றது. கடுந்தேறுறு கூறுகிளை என்ற தொடருக்குக் கடிதாகத் தெறுதலையுடைய மிக்க குளவியினம் என்று பழைய வுரை கூறியுள்ளது, குளவிக்குக் கடுந்தேறு என்ற பெயர் சங்க காலத்தில் வழங்கியது என்பது தெரிகின்றது. ஆனல் இப் பெயர் பிற்கால இலக்கியங்களில் வழங்கவில்லை. சிறந்த உரையாசிரியரான நச்சினர்க்கினியர் இந்தப் பெயரைப் பத்துப் பாட்டில் ஓரிடத்தில் மறந்து உரை கூறியிருப்பதைக் காண லாம். "கடுப்புடைப் பறவைச் சாதியன்ன பைதற விளைந்த பெருஞ் செந்நெல்லின்" என்று பெரும்பாணாற்றுப்படையும் இந்த உவமையைக் கையாண்டுள்ளது. "கடுப்புடைப் பறவைச் சாதி" என்ற நீண்ட பெயர் குளவியைப் பற்றிய நீண்ட

விளக்கப் பெயராகும். தெறுதல் என்ற சொல் அச்சந்தருதல் என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது. சாதி என்ற சொல் தமிழிலக்கியத்தில் முதன் முதலில் பெரும்பாணாற்றுப்படையில் வழங்கப்பட்டுளளதையும் கவனிக்க வேண்டும்.

"அருந்தெறன் மரபிற் கடவுள் காப்ப" என்று வரும் அகநானூற்று வரியில் (372) தண்டிக்கும் கடவுளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது குளவிக் கூட்டைக் கலைக்கும் சிறுவர் குளவி களால் ஊறுபட்டு தண்டிக்கப்படுவராதலால் 'கடுநதேறு ஊறு கிளை' என்றனஃழத்தனர். திண்டிவனத்தில் கல்லறைத் தோட் டத்தில் இருந்த குளவிக் கூட்டைக் கலைத்த நானும் என் நண்பர்களும் துரத்திய குளவிகளிடமிருந்து ஓடித் தப்பித்ததை இன்றும் நினைவு கூருகின்றேன். இந்தக் குளவிகள் பெரும் பாலும் ஆட்கள் போக்குவரவு இல்லாத இடங்களில்தான் கூடு கட்டும். ஆனால், யாராவது ஓர் ஆள் கூட்டை நெருங்கினாலோ, கலைத்தாலோ குளவிகள் எலலாம் கலைந்து வெளிப்பட்டு ஆளைக் கொட்டிவிடும். அவ்வாறு இக் குளவிகள் கூட்டமாகச் சேர்ந்து ஒரு பெண்ணைத் துரத்திச் சென்று தலையில் கொட்டியதால் அந்தப் பெண் தன் உயிரை இழந்ததை நான் கண் கூடாகக் கண்டேன். ஆதலின் கூட்டுக குளவிகள் மிகவும் கொடியன வாகும். மனிதருடைய உயிர்க்கே ஊறு விளைவிப்பனவாகும். குளவி கொட்டினால் கடுப்பு மிகுந்து இருக்குமாதலால் 'கடுப் புடைய பறவைச் சாதி' என்று அழைக்கப்பட்டுள்ளது. கடுந்தேறு என்ற குளவிப் பெயர் மிகுந்த கடுப்பைத் தருவது, அஃதாவது கடிய வலியைத் தருவது என்று பொருள்படும். அவ்வாறு கடுப்பைத் தரும் நஞ்சுடைய ஒருவகைப் பெரிய தேளை 'நண்டுத் தெறுக்கால்' என்று தென்னார்க்காடு மாவட் டத்தில் அழைப்பதைக் காணலாம். கொட்டித் தெறும் காலை உடைய பெரிய தேள் என்ற பொருளில் தெறுக்கால் என்று அழைத்தனர். வல்லூறு என்ற பெயர் வலிய ஊறு என்ற பொருள் தருவது போல, புள்ளூறு என்ற பெயர் புட்களுக்கு ஊறு என்று பொருள் தருவது போல 'கடுந்தெறு ஊறு' கடுந் தேறூறு என்று பதிற்றுப்பத்தில் வழங்கிற்று.

கடுந்தேறு என்ற பெயரை மறந்து நச்சினார்க்கினியர் பொருநராற்றுப்படையில் உரை கூறியுள்ளார்.

"குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை
கடுந்தெற்று மூடையி னிடங்கெடக் கிடக்கும்
சாலி நெல்லின் சிறைகொள் வேலி"

—பொருநராற்றுப்படை 244-246.

நெல்லை அறுத்து நெல்மணியைக் குவித்து வைத்திருந்தது 'கடுந்தெற்று மூடை' போலிருந்ததாகப் பொருநராற்றுப் படையில் கூறப்பட்டுள்ளது. இங்குக் கடுந்தெற்று மூடை என்பதற்கு நெருங்கத் தெற்றின குதிர் என்று நச்சினர்க்கினியர் பொருள் கூறியுள்ளார். மூடு என்ற உரிச்சொல்லிற்கு 'நெருங்க' என்ற பொருள் வேறு எந் நூல்களிலும், நிகண்டுகளிலும் காணப்படவில்லை. இங்கே கூறிய பொருள் பொருத்தமா என் பதை எண்ணிப் பார்க்கவேண்டும். நெல்லின் குவியலுக்குக் கடுந்தேறு என்ற குளவியின் கூட்டத்தை ஒப்பிட்டுப் பொருந ராற்றுப்படை கூறினது பதிற்றுப்பத்தில் கூறப்பட்ட மரபு உவமையைப் பின்பற்றியதாகும்.

"கடுந்தெற்று மூடையின்.........
வாடிய மாலை மலைந்த சென்னியுள்" —புறம். 285

புறநானூற்றிலும் பொருநராற்றுப்படையில் காணப்பட்ட 'கடுநதெற்று மூடை' என்ற சொற்றொடர் வருகின்றது. இதற்கு உ. வே சாமிநாதய்யர் நச்சினர்க்கினியரைப் பின்பற்றி அடிக் குறிப்புரை எழுதினர். பொருநராற்றுப்படை வரிக்கு நேரிய உரை நெல்லின் குப்பை குளவியின் மூடைபோல் இடத்தை அடைத்து இருந்ததாகக் கூறவேண்டும். பதிற்றுப்பத்தில் நெல் குவியலுககுக் குளவியின் செழுங்கூட்டை நிறத்தினலும், உருவத்தினலும் ஒப்பிட்டிருப்பதைக் காணலாம். ஆதலின் கடுந்தெற்று என்பதற்த நெருங்கிப்பின்னின என்ற பொருளில் உரை கூறியது பொருத்தமாகத் தெரியவில்லை. கடுந்தெற்று என்பதற்குக் கடுந்தேறுதலையுடையது என்று பொருள் கொள்ள வேண்டும். கடுந்தெற்று மூடை என்ற சொற்றொடர் கடுந் தேறுதலையுடைய குளவி மூடை என்று பொருள் தரும். மூடு என்று முடியும் ஊர்ப்பெயாகள் நாஞ்சில் நாட்டில் உள்ளன. மக்கள் கூட்டமாக வாழும் தன்மையைக் குறித்தே மூடு என்ற பெயர் ஊர்ப்பெயர்களின் இறுதியில் வருகின்றது. ('மரமூடு' என்றபேச்சு வழக்கு மரக்கூட்டம் என்ற பொருளில் நாஞ்சில் நாட்டில் வழங்குவதைக் காணலாம்) கூட்டில் குவிந்துள்ள குளவிகளின் கூட்டத்தையே கடுந்தெற்று மூடை என்று கூறிய தாகத் தெரிகின்றது. இவ்வாறு நெல் களஞ்சியக் கூட்டில், பத்தாயத்தில கூட்டுக் குளவிகள் கூடு கட்டுவது உண்மையே யாகும். மொய்த்தல் என்ற சொல் மூடுதல் என்றும் பொருள் தரும். குளவிகள் கூட்டமாகச் சேர்ந்து மூடியிருந்ததைக் கடுந்தெற்று மூடை என்றனர். கடுந்தேறுதலையுடைய குளவி மூடைபோலச் சாவி நெல் குவிந்திருந்தது என்று நேராகப்

பொருள் கூறவேண்டிய இடத்தில் நச்சினார்க்கினியர் வேறாக வலிந்து பொருள் கூறியுள்ளார். பதிற்றுப்பத்தில் நெல்லைக் குவித்தாற்போன்ற 'கடுந்தேறு உறு கிளை' என்று சொல்லி யிருப்பதைப் போன்றே கடுந்தெற்று மூடைபோலச் சாலி நெல் கிடந்ததாகப் பொருநராற்றுப்படை கூறிற்று.

ஆதலின் சங்க காலத்தில் குளவிக்கு வழங்கிய பெயர் கடுந்தேறு என்பதாகும். இந்தப் பெயர் சில பழந்திராவிட மொழிகளிலும் வழங்குவது கவனிக்கத்தக்கது. தமிழ்நாட்டில் சில இடங்களில் குளவியைக் கடம்பை என்று அழைக்கினும் இந்த வழக்கு மிகவும் அரிதாகத் தமிழில் காணப்படுகின்றது. மலையாளத்தில் இந்தக் கூட்டுக் குளவியின் பெயர் 'கடந்நல்' என்று வழங்குகின்றது. 'கடந்தை' என்று தமிழில் வழங்குவது போலக் கன்னட மொழியில் 'கடந்தூறு', 'கடந்துறுத்தெ' 'கடஜ', 'கனஜ' என்ற பெயர்கள் வழங்குகின்றன. தெலுங்கு மொழியில் 'கடுதூறு', 'கனூதுரு', 'கடஜு', 'கனஜு' என்ற பெயர்கள் வழங்குகின்றன. கன்னடப் பெயரில் பதிற்றுப் பத்தில் வரும் 'கடு' என்ற சொல்லும் 'ஊறு' என்ற சொல்லும் ஒத்திருப்பதைக் காணலாம். கடுந்தெறு என்று சங்க காலத்தில் வழங்கிய பெயர் தற்காலத் தமிழில் கடந்தை என்று பழக்கத்தில் அரிதாக வழங்குகின்றது. இப்பெயரில் ஊறு என்ற சொல் தமிழில் மறைந்துவிட்டது. ஆனால் கன்னடத்தில் 'ஊறு' 'உறுத்தெ' என்று வருவதைக் காணலாம். வல்லூறு, புள்ளூறு என்ற தமிழ்ப்பெயர்களில் ஊறு என்ற சொல் இதே பொருளில் வழங்குவதைக் காணலாம். குடகு மொழியில் கூட்டுக் குளவியைக் 'கடந்தி' என்றும், துளு மொழியில் 'கனஜடபுரி' என்றும் கோல் மொழியில் 'காண்டில் பொட்டே' என்றும், கோண்டி மொழியில் 'கண்டேலி', 'கண்டோலி' என்றும், கூயி மொழியில் 'கிராண்டி' என்றும் அழைக்கப்படுகின்றது. கடு என்ற சொல் கண்டு என்று கண்டாம்பூனை என்ற தமிழ்ப் பெயரில் மாறியுள்ளதைக் கவனிக்க வேண்டும்.

டாக்டர் எமனேவின் சொற்பிறப்பு அகராதியில் (Dravidian Etymological Dictionary) இந்தப் பழந்திராவிட மொழிப் பெயர்கள் எல்லாம் காணப்பட்டாலும் 'கடுந்தேறு' என்ற சங்க நூற்பெயர் காணப்படவில்லை. கடு என்ற மூலச் சொல்லை அடிப்படையாகக் கொண்டே தமிழில் கடுந்தெறு என்ற சங்க காலப் பெயரும், கடம்பை என்ற தமிழ்நாட்டுப் பெயரும் வழங்கியுள்ளன 'கடந்நல்' என்ற மலையாளப் பெயரும், மற்ற திராவிட மொழிப் பெயர்களும் வந்துள்ளன. கடு என்பது

கண்டு என்றும், 'கண' என்றும் மாறித் திராவிடமொழிப் பெயர்களில் வந்துள்ளது. இந்தக் குளவியின் பெயர் வடமொழியிலும் மராத்தி மொழியிலும் சென்றிருப்பதையும் கவனிக்க வேண்டும். வடமொழியில் 'கணபா', 'கண்டாவி', 'கண்டோளி' என்றும் பிராகிருதத்தில் 'கண்டெல்லி' என்றும், மராத்தி மொழியில் 'கடில்' (Khadil) 'கடில்மாசி' என்றும் வருகின்றது.

குளவிகளில் ஓரினம் தேனினம் போலக் கூட்டமாக வாழ்கின்றது. சங்க இலக்கியத்தில் செந்நெல் குவியலைப் போன்ற கடுந்தெறு என்று உவமித்திருப்பதால் அவ்வாறு கூடுகட்டி வாழும் இனமான குளவி Polistes Rebraeus என்பதேயாகும். இந்தக் குளவிகள் செந்நெல் போன்று நிறத்திலும் உருவத்திலும் தோற்றமளிக்கும். இந்தக் குளவிகள் முக்கால் மீட்டர் அளவுள்ள கூட்டைக் கட்டுகின்றன. 'சுற்றுக்கருங் குளவிச் சூரைத்தூறு' என்று பிற்காலத்திய தனிப்பாடலில் (1, 107, 44) கூறப்பட்டுள்ள கருங்குளவியும் இதுவேயாகும்.

---

## நான் கண்ட உரைவேந்தர்

*சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்களோடு நான் 1947 முதல் நெருங்கிப் பழகியிருக்கிறேன். "சிறந்த பேச்சாளர்கள்" என்னும் எனது நூலில் அவர் தம் பேச்சாற்றலையும் அஞ்சா நெஞ்சத்தினையும் எடுத்துக் காட்டியுள்ளேன். ஆந்திரர் சென்னையையும் திருப்பதியையும் உரிமை கொண்டாடி வலியுறுத்திக் கேட்டபோது, அவரது "தமிழ் நாட்டு வட எல்லை" என்பது பற்றிய கட்டுரையினைத் 'தமிழ்க் கலை' இதழில் படித்து அவரது நுண்மாண் நுழைபுல மிக்க ஆராய்ச்சித் திறனை அறிந்து மெய்மறந்தேன். பேராசிரியர் ஔவை. சு. பிள்ளையவர்கள் ஆராய்ச்சித்திறன் மிக்கவராக இருந்ததோடு கல்வெட்டுக்களைப் படித்தறிவதில் தேர்ந்தவராகவும் இருந்தார். ஏட்டுச் சுவடிகளின் துணை கொண்டு சங்க இலக்கியங்களையும் இலக்கணங்களையும் நன்கு ஆராய்ந்து பதிப்பிக்கும் பதிப்பாளராகவும் திகழ்ந்தார்கள். அதனாலேயே அவர் 'உரைவேந்தர்' எனச் சிறப்பிக்கப் பெற்றார்.*

*தமிழகப் பல்கலைக் கழகங்கள் இவரைப் போன்ற பெரும் புலவர்கட்கு முனைவர் பட்டம் வழங்கிச் சிறப்பித்துத் தாமும் பெருமை படைத்திருக்கலாம்! இனியேனும் அவை அப் பெருமையினைப் பெற முயலுமாக.*

மா. சு. சம்பந்தன்

(நூலாசிரியரும் பதிப்பாளரும்)

# மகிபாலன்பட்டி குடைவரைக்கோயில்

[தி. இராசமாணிக்கம், பி. ஏ., பி. காம்., விசாரத்

இணைப்பதிவாளர், தனி அதிகாரி, திருநெல்வேலி மத்திய கூட்டுறவு வங்கி (வரையறை). திருநெல்வேலி.]

மாஸிடோனியா நாட்டு மன்னனான அலெக்சாண்டர் தனது 33 வயதிற்குள் உலகில் பாதியைத் தன் படை வலிமையால் வென்றான். மக்களின் பல்வேறு இனங்களை ஒன்றாக இணைத்து ஒரே மனித குலமாக இயக்கவேண்டும் என்பது அவனது பேரவா. உலகம் முழுமையும் தழுவிய அரசு அமைக்கவேண்டும் என்ற எண்ணம் முதன் முதலில் அவனுக்குத்தான் தோன்றியது. எனவே அவன் உலக வரலாற்றில் மாமன்னனாகக் கருதப்படுகிறான்.

"வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால் - அதில்
மானுடர் வேற்றுமை யில்லை"

என்றார் பிற்காலத்தைச் சார்ந்த பாரதியார். மனித இனம் ஒன்றே என்ற இந்த உயர்ந்த எண்ணத்தை ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த கணியன் பூங்குன்றனார் என்ற புலவர்,

"யாதும் ஊரே யாவரும் கேளிர்"

என்று வலியுறுத்தி உள்ளார். இவரது ஊர் பண்டை நாள்களில் 'பூங்குன்றம்' என்று அழைக்கப்பெற்று, இப்போது 'மகிபாலன்பட்டி' என்று வழங்கப்படுகிறது.

இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூரிலிருந்து ஆ. தெக்கூர் செல்லும் வழியில் 6 கி. மீ. தொலைவில் பிரிந்து செல்லும் வழியிலிருந்து 3 கி. மீ தொலைவில் மகிபாலன்பட்டி என்ற சிற்றூர் உள்ளது. இங்கு ஊருக்குத் வெளிப்புறத்தில் உள்ள குன்றில் குடைவரைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. குடைவரை மேற்கு நோக்கி உருவாக்கப்பட்டுள்ளது.

ஏனைய குடைவரைக் கோயில்களில் உள்ளது போன்று தூண்கள், அரைத்தூண்களுடன் கூடிய முகப்புக்கொண்ட மண்டபம் இல்லை. கருவறை மட்டுமே உள்ளது. கருவறையில் ஏனைய பாண்டியர்களின் குடைவரைக் கோயில்களில் உள்ளது போன்று பாறையிலேயே இறைவன் உருவும் அருவும் உருவருவுமற்ற இலிங்கத் திருவுருவாக அமைக்கப்பட்டுள்

ளான். கருவறைக்கு இருபுறமும் பெரிய புரைகள் உருவாக்கப் பட்டுள்ளன.

தென்புறமாக உள்ள புரையில் ஐந்து கைகளையுடைய விநாயகர் புதைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளார். இவருக்கு 4 கைகள் உள்ளன. ஒரு கையில் அவருக்குமிக மிகவும் பிடித்தமான மோதகம் காணப்படுகிறது. மார்பில் முப்புரி நூலும், வயிற்றில் உதரபந்தம் என்னும் வயிற்றுக் கட்டும் அமைக்கப் பட்டுள்ளன. பொதுவாக விநாயகரைக் குத்திட்டு உட்கார்ந்த நிலையில் உருவாக்குவது வழக்கம். இதினின்றும் மாறுபட்டு, இங்கு இவர் தாமரையிருக்கையில் (பத்ம ஆசனத்தில்) யோக நிலையில் செதுக்கப்பட்டுள்ளார். பல்லவர்களின் குடை வரைகளில் விநாயகர் வடிவம் அரிதாகக் காணப்படும். ஆனால் பாண்டியர்களின் குடைவரைகளில் விநாயகர் வடிவங்கள் புதை சிற்பங்களாகக் காணக்கிடக்கின்றன. எடுத்துக்காட்டாக இராம நாதபுரம் மாவட்டம் பிள்ளையார் பட்டியில் உள்ள குடைவரைக் கோயிலில் அமைந்துள்ள வடிவம் முற்கால வடிவங்களில் ஒன்று. மேலும் அதே மாவட்டத்தில் திருக்கோளக்குடி குடை வரைக்கோயிலிலும், மற்றும் நெல்லை மாவட்டத்தில் திருமலா புரம் மற்றும் வீரசிகாமணி ஆகிய இடங்களில் உள்ள குடை வரைக் கோயில்களிலும் பிள்ளையார் வடிவங்கள் புதை சிற்பங் களாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றினின்றும் அக்காலத்தில் பிள்ளையார் வழிபாடு மக்களிடையே நன்கு பரவியிருந்தமை புலனாகிறது.

மகேந்திரவர்மன் பாணியில் அமைக்கப்பட்ட குடைவரைக் கோயில்கள் பொதுவாக மண்டபங்களாக இருந்தன. அவற்றின் முகப்பில் இருபெரும் தூண்களும், இரு அரைத்தூண்களும், நடுவில் எட்டுப்பட்டையுடனும், மேலும் கீழும் சதுரமாகவும் உருவாக்கப்பட்டன. இங்குள்ள குடைவரை இத்தகைய அமைப்பினைக் கொண்டதாக இல்லை. செங்கற்பட்டுக்கு அருகில் வல்லம் என்ற இடத்தில் 3 குடைவரைக்கோயில்கள் உள்ளன. அவற்றில் 2 குடைவரைக் கோயில்களில் மண்டபங்கள் இல்லை. கருவறைகளை மட்டுமே கொண்டுள்ளன. அவை மகேந்திர வர்மன் பாணியில் அமைந்துள்ளனவாகத் திரு. கே. ஆர். சீனி வாசன் தமது "பல்லவர் குடைவரைக் கோயில்கள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே இங்குள்ள குடைவரைக் கோயிலையும் மகேந்திரவர்மன் பாணியில் அமைந்துள்ளதாகக் கொள்ளலாம். மேலும் மகேந்திரவர்மன் பாணியில அமைக்கப் பட்ட குடைவரைக்கோயில்களின் காலம் கி. பி. 610 முதல் 640 என்று கருதப்படுதலால். இதன் காலத்தை 7 ஆம் நூற்றாண் டாகக் கருதலாம்.

———

# குறள் நெறி விளக்கம்*

[முனைவர். சொ. சிங்காரவேலன்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.]

## 1

இளங்காலைப் பொழுது; வைகறை வேளை; பொழுது புலர்ந்துகொண்டிருக்கின்றது. தூங்கிக்கொண்டிருந்த உலகம் விழிப்பு நிலைக்குத் திரும்பிக்கொண்டிருக்கின்றது. பறவைகள் தத்தம் கூடுகளைவிட்டு ஒலி எழுப்பியபடியே பறந்து வெளியே வருகின்றன. மனிதனின் உணர்வும், உற்சாகமும் மறுமலர்ச்சி பெறுகின்றன. பழையநாள் பொய்யாய் - பழங்கதையாய் மெல்லப் போய்விட்டது. இதோ புதிய நாள் ஒன்று உதயமாகி விட்டது.

அவனுடைய எண்ணங்களுக்குச் சுறுசுறுப்பு மெருகேற்றுகிறது. அவனது அன்றாட வாழ்வின் புதிய அத்தியாயம் ஒன்று பிறப்பெடுத்து விடுகிறது; துயிலில் தன் பழைய கவலைகளை மெல்ல மறந்து இளைப்பாறிக்கொண்ட மனித மனத்திற்குத் தெம்பும், நம்பிக்கையும் ஊட்டக் கதிரவன் கீழ்வானத்தில் உதித்துவிட்டான்; நம்பிக்கையுடன் தன் புதிய நாளைத் திட்டமிட்டபடி தொடங்குகின்றான் மனிதன்.

ஆம்; இப்படித்தான் தோன்றுகின்றது திருக்குறளை எண்ணும்போது எனக்கு. அஃது அறநூல் என்று கூறுவார் கூறட்டும்; பொருள் நூல் என்று ஆராய்வோர் பேசட்டும்; காமத்தை விளக்கும் திருநூல் என்று சொல்லுவோர் சொல்லட்டும். எல்லாவற்றிற்கும் மேலாகத் திருக்குறள் - திருவள்ளுவர் என்ற அந்த அற்புதமான மாமனிதரின் படைப்பு ஒரு நம்பிக்கை நூலாக - விடிவெள்ளித் தோற்றமாக எனக்குத் தோன்றுகிறது.

நெறிமாறிக் கிடக்கும் வாழ்விற்குக்கூடக் குறள்நெறி உணர்வு நம்பிக்கை ஊட்டுகின்றது; அந்த நம்பிக்கை நூலின் உள்ளே ஒளிவிட்டுத் திகழும் சுடர்மணிகள்தாம் எத்தனை! எத்தனை!

---

* *திருச்சிராப்பள்ளி, அனைத்திந்திய வானொலியில், 30, 31—3—81, ஆகிய நாட்களில் ஆற்றிய உரை; நிலையத்தாரின் இசைவுடன் வெளிவருகின்றது.*

வாழ்க்கை என்பதே எண்ணத்தால் அமைவதுதானே! நல்ல எண்ணத்தால் வளர்வதே வாழ்க்கை; மாறுன எண்ணத்தால் விழ்வது. எத்தகைய வாழ்க்கைக்கும் எண்ணங்களே மூலங்கள். எண்ணங்களின் விரிவே - செயல்விரிவாக - வாழ்வு விரிவாக மலர் கின்றது என்கின்றது ஆன்ருேர் திருவாக்கு.

தன்னை நோக்கும் தன்னிலைப் பார்வை வராதவரை மனித னுக்கு வளர்ச்சி இல்லை. தன்னிலைப் பார்வையைத் திருக்குறள் விரிவுபடுத்துகிறது; எப்படி?

வாழ்க்கையில் நாம் பலரைச் சந்திக்க நேர்கின்றது. வீட்டில், வீட்டுக்கு வெளியில், வீதியில், வீதிக்குப் புறத்தில், ஊரில், ஊருக்கு மருங்கில் - இப்படி எங்கெங்கும் மனித மலர்கள் பூத்துக்குலுங்கும் பூந்தோட்டமாக விளங்குகின்றது உலகு. அந்த மலர்கள்தாம் எத்தனை வகை? சில நச்சு மணத்தை உடையன வாகக்கூட மலர்கின்றன; எட்டிக் காய்கள் கடுங்கசப்பாக விளை வதுபோல - நுகர்ந்த மாத்திரத்திலேயே கீழே தள்ளிவிடும் நச்சுக் காற்றைக்கூடச் சில பூக்கள் - மனிதப்பூக்கள் பரப்புகின்றனவே! ஆம்; அவற்றையும் பொறுத்துக் கொள்ளத்தான் பழகவேண்டும். அந்தப் பொறுமை, அந்தச் சகிப்புத் தன்மை - அந்தப் பண்பாடே 'பொறையுடைமை' என்கிறது பொய்யாமொழி.

எத்தனை பேரால் பொறுமை கடைப்பிடிக்க முடிகிறது இந்தக் குழுகாயத்தில்!

பேருந்து வண்டிப் பயணத்தின்போது, வண்டி வேகமாக ஓடும்போது, ஓரத்தில் உட்கார்ந்திருந்த ஓர் அப்பாவி மனிதர் வெளியே உமிழ் நீரை உமிழ்ந்தபோது, காற்றுவேகத்தில் அந்த நீர்த்துளிகள் தம்மீதுபடக் கைகளை ஓங்கி அறைந்து விலங்கு நிலைக்கு மிக விரைவில் மாறுவோர் நம்மிடையில் இருக்கத்தானே செய்கின்ருர்கள்!

நம்மைப் புரிந்துகொள்ளாமல், அறியாமையில் வீழ்ந்து கிடக்கும் மனிதர் சிலர் இழிசொற்களால் புழுதி வாரித் தூற்றும் போது, வெகுண்டெழுந்து போராடுவோர்தாமே இந்தக் குழுகாயத் தில் நூற்றுக்கு நூறு விழுக்காடு வாழ்கின்ருர்கள்! எத்தனை பேர்க்குத் தம்மை இகழும் மக்களையும் பொறுத்துக்கொள்ளும் பொறுமை இருக்கிறது?

இப்படி நம்மைப் பார்த்து வள்ளுவர் வினவுகின்ருர்; அந்தப் பண்பாடு - வைததனை இன்சொல்லாகக் கொண்டு பொறுத்துக் கொள்ளும் உள்ளுறுதி நமக்குள் வளர வேண்டும்.

பூமியை நோக்குங்கள் ;- பாறையால், மண்வெட்டியால் வெட்டுகிறோம் ; கொத்துகிறோம் ; புண்ணாக்கினாலும் அந்த மண்மகளுக்கிருக்கும் மாறாத பொறையுடைமையைக் கண்டாவது, இந்த 'மண்ணின் மைந்தர்' களுக்கு உணர்வு பிறக்காதா ? என்பதுப் பெரியாரின் எண்ணம். அதையே எடுத்துக் காட்டுகின்றார்.

''அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை'' (பொறையுடைமை-1)

என்று தம்மை இகழ்ந்தவர்களையும் பொறுத்து ஆற்றிக் கொள்ளும் பெருந்தகவு, இந்த நிலமகளைப் பார்த்தாவது நம்மிடம் தழைக்காதா என்று மனித குலப் பாவலன் கவலைப்படுகின்றான்.

மண்கூட ஒருவகையில் பார்த்தால் உயிரற்ற பொருள்; 'சடம்' என்று கூறுவர். அதற்கிருக்கும் அந்தப் பண்பு, பொறுமை, உயிர்ப்பொருளாகிய மனிதனிடம் இருக்கவேண்டாமா என்று கேட்காமல் கேட்கிறது குறள் :

மற்றுமொரு குறிப்பு: தன்னை இகழ்கின்றான் ஒருவன் என்றால் அதற்கு அடிப்படை யாது என்று சிந்தித்தல் வேண்டும் ; தன்னிடத்தில் அதற்கேற்ற தீய பண்பு இருக்கின்றது என்றால் அதனின்றும் மாறவேண்டும் ; திருந்த வேண்டும் என்று சிந்திக்க வேண்டும் மனிதன். திரிகடுகம் என்ற நூலின் பாட்டு ஒன்று இங்கு நினைவு வருகின்றது :

''வைததனை இன்சொல்லாக் கொள்வானும் - நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும் - ஊறிய
கைப்பதனைக் கட்டியென்று உண்பானும் - இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.''

இத்தகைய பொறுமை உடைய மனிதர்கள், இந்த உலகத்தில் வாழ்கின்ற பொழுதிலேயே மெய்ப்பொருளைக் கண்டு வாழ்கின்றவர்கள் என்று நல்லாதனார் பாராட்டுகின்றார்.

தம்மை இகழ்வார்தம் சொற்களைக் கேட்டால் - இனியேனும் உள்ளத்தை அடக்கிப் பொறுமைக் கடிவாளத்தால் இழுத்தும் பிடிப்போம். இதற்கு எடுத்துக் காட்டிற்கு வேறெங்கும் போக வேண்டாம் ; நாம் காலூன்றி நிற்கும் மண்ணையே நோக்குவோம் ! பொறையுடைமையில் மலர்வோம் ; இந்தப் பொறை உடைமை என்ற எண்ணத்திலே பல நல்ல நினைவுகள் பூத்துக் குலுங்கும் பூந்தோட்டமாக நம் உள்ளம் மாறும் ; முயற்சி செய்வோமா ?

## குறள்நெறிவிளக்கம்—“2”

நம்முடைய அன்றாட வாழ்வில், நாம் செய்யும் சிறுசிறு செயல்களில்கூட நம் வாழ்வின் அடிப்படைப் பண்புகள் கலந்திருக்கும். அதனை நாம் சிந்தித்துப் பார்ப்பதில்லை; சான்றோர்கள் இவற்றைச் சிந்திக்கின்றார்கள்; நமக்கும் அவர்களுக்கும் உள்ள வேற்றுமையே இதில்தான் உள்ளது.

நாம் குமுகாயமாக வாழ்கின்றோம்; குமுகாயத்தில் ஓர் உறுப்பாக உள்ளோம். நமக்கு உள்ள பொறுப்புக்கள் அதிகம் என்பதனைப் பலர் உணர்வதில்லை. அந்தப் பொறுப்புக்களைச் சுட்டிக் காட்டினால்கூடப் புரிந்துகொள்ளாததுபோல், நடித்துக் கொண்டு தம் போக்கில் போய்க்கொண்டிருக்கும் பலரை நாம் காணாமல் இல்லை. குமுகாயப் பொறுப்புக்களை உணர்ந்து வாழ்வதே ஒரு குமுகாயத் தொண்டு; அதுவே ஒரு குமுகாயக் கடன்.

குமுகாயக் கடன் என்றதும் குடும்பக் கடனிலிருந்து நெடுந் தொலைவு என்று எண்ணுவது பிழை. வேறு யாரோ செய்ய வேண்டுவது குமுகாயக் கடமை என்று நினைப்பதும் பொருந்தாது.

'பொருள்களின் விலை ஏறிவருங்காலத்தில், மண்ணெண்ணெய், அரிசி, உணவு, எண்ணெய் முதலிய பொருள்களைக் காசு மிகுதியாகக் கொடுத்தாவது வாங்கிக் குடும்பநலம் காப்பதோடு நம் கடமை முடிந்துவிட்டது என்று எண்ணுவது சரியன்று; தன் தோட்டத்தில் பூஞ்செடியும் மரமும் வைப்பதுடன், வீதியில் மரம் வைப்பதும் தன் கடன் என்று உணர்தல் வேண்டும். தன் வீட்டுக் குழாய் நீரில் நல்லவண்ணம் தண்ணீர் வந்தால் போதும் என்று எண்ணுவது போதாது; வீதிக் குழாய் நீரில் தடை ஏற்பட்டாலும் அதற்கு ஆவன செய்யும் குமுகாயப் பொறுப்பு ஒவ்வொரு தனி மனிதனுக்கும் உண்டு என்பதை மறந்துவிடக் கூடாது.

குமுகாயத்தில் எல்லோரும் வாழவேண்டும்; எல்லோரும் எல்லாமும் பெற்று வாழவேண்டும் என்று எண்ணும் பெருந்தன்மையை நாளும் வளர்த்துவர வேண்டும். காரணமின்றிப் பிறன் ஒருவனை ஒருவன் பழித்தான் என்றால், அதற்குக் காது கொடுக்காமல், தன்னை ஒருவன் பழித்தான் என்றால் கொதித்தெழும் போக்கு மாற வேண்டும்; ஆம்; அறநெஞ்சம் உடையார் காட்டும் நெறி இது; இதனை உணர்ந்தால்தான்,

> “தனி ஒருவனுக்கு உணவு இல்லை எனில்
> சகத்தினை அழித்திடுவோம்”

என்ற பாரதியின் வீர உணர்வு நமக்குப் புரியும்.

தன்னை ஒருவன் இகழ்கின்றான் என்று வைத்துக்கொள்வோம்; அவனும் தான் வாழும் குமுகாயத்தின் ஓர் உறுப்பினனே என்ற உணர்வு மேலோங்கினால்தான், அன்புப் பார்வைக்கு அங்கே இடம் உண்டு. 'அவனைத் தண்டித்துக் கண்டித்தற்குரிய தகுதி தன்னிடம் இருந்தும், அவனது இகழ்ச்சியைப் பொறுத்துக் கொள்' என்கின்றது குறள்; அதைவிட ஒரு படி மேலே சென்று, 'பொறுத்துக்கொண்டால்கூட அவனது இகழ்ச்சி உன் மனத்தில் உறுத்திக்கொண்டே இருக்கும்; அதனை உள்ளத்திலே கொள்ளாமல் அப்பொழுதே மறந்துவிடு' என்கின்றார் குறளாசிரியர்; அவ்வாறு மறந்துவிடுதல் பொறுத்துக் கொள்ளுவதை விட, நன்று என்று தீர்ப்பும் வழங்கி விடுகின்றார் வள்ளுவர்.

> ''பொறுத்தல் இறப்பினை என்றும்; அதனை
> மறத்தல் அதனினும் நன்று'' (பொறையுடைமை-2)

எவ்வளவு அருமையான மொழி இது! வள்ளுவம் இங்குப் பிறர் செய்யும் இகழ்ச்சிச் செயல்களைக் குறிப்பதற்கு என்ன சொல்லைக் கையாள்கின்றது, பார்த்தீர்களா?

துன்பத்தைத் தாங்கிக் கொள்ள வேண்டும் என்பது வள்ளுவர் கோட்பாடு. சிறுசிறு துன்பங்களைக்கூடத் தாங்கிக்கொள்ளும் பொறுமை நம்மில் பலர்க்கு இல்லை என்பது கண்கூடு. அந்த அளவிற்கு நம்மில் பலர்க்கு இதயம் மெலிந்துபோய் உள்ளது வருந்தத்தக்க உண்மை. பேருந்துக்குக் காத்துக் கொண்டிருந்து சலிப்பு வந்தபோதுகூட ''இஃது என்ன உலக வாழ்க்கை'' என்று வருந்திச் சலித்துக்கொள்ளும் மென்மை பலருக்குச் சொந்தமாக உள்ளதைப் பார்க்கின்றோமே! திரைப் படத்துக்குக் கூப்பிட்டும், தலைவலியால் வர மறுத்தாள் துணைவி என்பதற்காக நச்சு மருந்து உண்டு வாழ்வை முடித்துக்கொள்ளும் கணவனின் கோழைமையை அன்றாடம் செய்தித்தாள்கள் காட்டு கின்றன அல்லவா? தேர்வுக் களத்தில், அதிகமான மதிப் பெண்களைப் பெற முடியாமல், வெற்றிக் கோட்டின் விளிம்பிற்குக் கீழே சென்றதனால் மனம் உடைந்து உலக வாழ்வைத் துறக்கும் இளைஞர் நிலை காட்டுவது என்ன? சிறு சிறு துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் அளவிற்குக்கூடத் திண்மையான உள்ளத்தை இன்றைய இளைய தலைமுறை இழந்து வருகின்றது என்பதை அல்லவா இது காட்டுகிறது!

———

# கரும்பு—சொல்விளக்கம்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

கரும்பு *karumbu*, பெ. (n) 1. புல் வகையைச் சார்ந்ததும் மூங்கிலும் நாணலும்போற் கணுக்களுள்ளதும் இனிக்கும் சாறுள்ளதும் கழைவடிவானதும் வெப்ப நாடுகளில் 6 அடி முதல் 26 அடி வரை வளர்வதும், சருக்கரை, வெல்லம் செய்ய மூலப் பொருளானதுமான உயிர்க்கால் நெடும் பயிர்வகை; Sugar-cane, major source of the world's sugar and Molasses a giant perennial grass of the genus *Saccharum officinarum* cultivated in tropical and sub tropical regions. கரும்புபோற் கொல்லப் பயன்படுங் கீழ் (குறள். 1078). 2. கழை (புனர்பூசம்) என்னும் ஏழாம் நாண்மீன் (*திவா.*); Punarpūsam, the Seventh nakṣhatra. 3. காமனின் வில்; (குற். குற. 34) bow of Manmatha. கைக் கரும்பென்ன கணையென்ன நீயென்ன மன்மதா. 4. இனிப்பு; sweetness. அவள் பேசினால் கரும்பு, நான் பேசினால் வேம்பா?

ம. கரிம்பு. துட. கப் (b). க. கர்பு. து. கர்ம்பு குட. கப் (b.)

கரும்பின் பிறபெயர்கள்: கழை, இக்கு, செறுக்கு, கன்னல்.

[கரு - கருமை. கரு - கரும்பு = கரிய நிறமுள்ளது. கல் (கருமைக் கருத்து வேர்ச்சொல்). குல் - குலவு. குல் - கல் - கலவு. குலவுதல் = கூடுதல், கலத்தல். கலத்தற் கருத்தினின்று

---

பாவாணர் எழுதிய கடைசி அகரமுதலிச்சொல்

*தம் வாழ்வையே தமிழாராய்ச்சிக்காகவும் தமிழின் தனித் தன்மையைக் காப்பதற்காகவும் காணிக்கையாக்கிக்கொண்ட மொழிநூன் மூதறிஞர் பாவாணர் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி முதன் மடலத்தின் முதற்பகுதியை எழுதிமுடித்து இரண்டாம் பகுதியைத் தொடங்கினர்.*

*அவர் இம் மண்ணுலகை விட்டு நீங்குமுன் விளக்கம் எழுதிய கடைசி அகரமுதலிச்சொல் "ஆசைமொழி".*

*தமிழ்மொழியின்மீது தாம்கொண்ட மாளாத ஆசையைத் தமிழுலகிற்குக் காட்டும்பொருட்டே 'ஆசைமொழி' என்னும் சொல்லோடு அவர் தம் அகரமுதலிப் பணியை முடித்துக்கொண்டாரோ என எண்ணியெண்ணி மாழ்கவேண்டியுள்ளது.*

[இரா. மதிவாணன்]

மயக்கக் கருத்தும் மயக்கக் கருத்தினின்று இருண்மைக் கருத்தும் இருண்மைக் கருத்தினின்று கருமைக் கருத்தும் தோன்றும்.

கல் + து = கஃறு. கருமைக் குறிப்புச் சொல்.

"கஃறென்னுங் கல்லத ரத்தம்". (தொல். எழுத். 40.) கல் - கன் - கன்னல் = கரியவகைக் கரும்பு (திவா.) கல் - கரு. (ஒ. நோ: இல் - இரு) கரும்புல் - பனைமரம். கரும்புல் பனைமரத்தைக் குறிப்பது போன்றே கரும்பையுங் குறித்ததாகிப் பண்டு வழக்கிலிருந்து பின் கரும்பு எனக் குறுகியிருத்தலும் கூடும்].

பனையும் கரும்பும், வெல்லங்காய்ச்ச இன்சாறு உதவும் பயிர் வகைகளாக இருந்ததால், பனைவெல்லத்தையும் கரும்பினாற் செய்த வெல்லத்தையும் குறிக்க கருப்பட்டி என்னும் சொல் வழக்கூன்றியது. இது வடபுல மொழிகளில் கொர்டு என்றும் கூடு (gūḍ) என்றும் வழங்குதல் காண்க.

கரும்புல் - பனை. கருப்பணி - பதநீர். கருப்பட்டி - பனை வெல்லம். கரும்புல்லினின்று அட்டதும் கருப்பட்டி; கரும்பினின்று அட்டதும் கருப்பட்டி. மூங்கில் போன்றிருத்தலான் கரும்பை 'கழை' என்றனர். முழுநீளக்கரும்பை 'கடெ' (gaḍe) 'ஜொளெ' என்னும் இட வழக்குகள் கழை என்பதன் திரிபே. கழை - கடெ, ஒ. நோ. மழ - மட (இளமை) கழை - களெ - சொளெ - ஜொளெ. நீர்வளம் மிக்க வயலில் விளைக்கப்படுதலானும், இனிப்பான நீர்க் கோப்புடைமையானும், 'செறுக்கு' என்றும் பெயர் பெற்றது.

தெ. செறுக்கு - கரும்பு. குசரா. செர்டி.

செறு = வயல். செல் = நீர் கொண்ட மழைமேகம். செல் - சேல், நீரிற் பிறழும் மீன். சேறு - சாறு = நீர் கலந்த பொருள். சேறு - செறு, நீர் தேங்கும் வயல். செறு - செறுக்கு = நீர்வளம் மிக்க வயலில் விளைவதும் இனிப்பான நீர்க்கோப்புடையதுமான கரும்பு.

வடஇந்திய மொழிகள் பெரும்பாலனவற்றுள், கரும்பு இக்கு, ஈக், கன்னா எனப்படும். இந்தி. ஈக், கன்னா. வங். அக், ஆக். மரா. ஈக், ஊஸ். உருது. கன்னா. ஈக். அரபி. கஸ்புசகர். இள் - இள (இளகிய). இள் + கு = இக்கு = கரும்பு. (ஒ. நோ. சுள் + கு = சுக்கு). இனிய சாற்றுக் கோப்பால் ஒடித்தால் ஒடியும் அளவிற்கு இளக்கமான தண்டையுடையது. வடமொழியிலும் இப் பழந்தமிழ்ச் சொல் சென்று 'இக்ஷ' என வழங்குகிறது. அவர்கள்

இச்சொல்லுக்கு 'இஷ்' (விரும்புதல்) என்பதை வேராகக் காட்டுவர். விரும்பப்படுவன கரும்பொன்றே அன்மையான் அது பொருந் தாமை அறிக. ஒடியும் அளவிற்கு இளகிய தண்டாக இருப்பது இஃதொன்றே என்பதும் ஏனைய நாணல், மூங்கில், கொடி போன் றவை காற்றுக்குச் சாய்ந்து கொடுக்கும் இயல்பன்றி ஒடியும் இயல் புடையன அல்ல என்பதும் தெரிதருதேற்றம்.

கரும்புக்குரிய கழை என்னும் பெயர் சாவித்தீவினரின் (Java) மொழியில் 'கோள' (Goela) என்று வழங்குகிறது.

கரும்பின் வகைகள்: Sugar-cane consists of different varieties and they are:

1. செங்கரும்பு—red-coloured Sugar-cane. சிவந்த நிற முள்ள கரும்பு. இதனைப் பூங்கரும்பு என்றும் கூறுவர்.

2. பேய்க்கரும்பு—wild sugar-cane—Saccharum spontaneum. பட்டினத்தார் கையில் கொண்டிருந்த கரும்பைப் பேய்க்கரும்பு என்பர். சடைபோன்று உள்ளீட்டில் சாரமற்றது (சா. அக.) இது நாணல் வகையைச் சார்ந்தது. உண்மையில் கரும்பன்று. இதனை 'வேழக் கரும்பு' என்றும் கூறுவர். (பெரும்பா. உரை 263)

3. வெண்கரும்பு—White coloured sugar-eane—Saccharum officinarum. தடித்து மென்மையாயிருக்கும் கிழக்காசியக் கரும்புவகை. வெளுத்தும் வெளிர்ப் பச்சையாயுமிருக்கும்.

4. வெண்கதலிக் கரும்பு—a superior kind of sugar-cane—Saccharum genus. உயர்வகைக் கரும்பு. இதனை இரசதாளிக் கரும்பு என்றும் கூறுவர்.

5. நாட்டுக்கரும்பு—Saccharum barberi. சன்னமான கரும்பு வகை. வடஇந்தியாவில் மிகுதியாகப் பயிராகிறது. நோயும் தட்பவெப்ப வேறுபாடும் தாங்கும் வன்மையுள்ளது.

6. காட்டுக் கரும்பு—Saccharum Spontania. சமதட்ப வெப்பநிலையில் விளையும் கரும்பு.

7. கிழைக்கரும்பு—Saccharum Robasta. நியூகினித் தீவில் விளையும் கரும்பு வகை.

8. சீனக் கரும்பு—Saccharum Sinenci s3. சிறிது தடிப்பான சீனநாட்டுக் கரும்பு.

9. கழைக்கரும்பு—தென்னாட்டுக் கரும்பு வகை. இதனை மூங்கிற்கரும்பு என்பர்.

10. நாணற் கரும்பு—நாணல்போல் பருமன் குறைந்த கரும்பு.

11. வரிக்கரும்பு—இதனை இராமக்கரும்பு என்றும் நாமக் கரும்பு என்றும் கூறுவர்.

12. சாலிக்கரும்பு—சாவா எனப்படும் சாலித்தீவினின்றும் வந்த கரும்பு சாலிக்கரும்பு எனப்பட்டது. இது 10 அடி முதல் 26 அடி வரை வளரும். இந்தியாவில் ஒரு குறிப்பிட்ட பரப்பில் விளையும் கரும்பை விட அங்கு நான்கு மடங்கு அதிக விளைச்சல் தரும்.

13. கன்னல்—கருங்கரும்பு.

14. குட்டைக் கரும்பு—குட்டையாக வளரும் கரும்பு. இதனைக் கட்டைக் கரும்பு என்றும் கூறுவர்.

15. சீமைக் கரும்பு—வெளிநாட்டுக் கரும்பு. கலப்பினவகை.

16. சீனிக் கரும்பு—அதிக இனிப்புள்ள கரும்பு.

புதிதாக உண்டாக்கப்பட்ட கலப்பினக் கரும்புகளில் 68 வகைகள் உள்ளன.

கரும்பு இந்நாட்டின் தொல்பழங்காலப் பயிர். இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் கரும்பு இருந்ததாக ஆங்கிலக் கலைக்களஞ்சியம் கூறுகிறது. விவிலிய நூலில் தேனென்றே இனிப்புப் பொருளாக இடம் பெறினும் வடமொழி வேதங்களில் கரும்பு குறிப்பிடப்படுகிறது. கி. பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவிலிருந்து சீன அரசனுக்குக் கரும்பு அனுப்பப்பட்டது. கி. பி. 424இல் தென சீனத்தில் கரும்பு பயிராக்கப்பட்டது. ஆறும் நூற்றாண்டில் பாரசீகத்திற்குச் சென்றது. சீன அரசன் வெல்லங் காய்ச்சும் முறையைத் தெரிந்துகொள்வதற்காக ஆறும் நூற்றாண்டில் இந்தியாவுக்கு ஒரு குழுவை அனுப்பி வைத்தான். நாளடைவில் மேனாடுகளுக்கு இந்தியாவிலிருந்து கரும்புப் பயிரைக் கொண்டு சென்றனர். கி. பி. 641இல் கரும்பு எகிப்துக்கு அறிமுகமாகியது. அதற்குமுன் மேலை நாடுகளில்

மருத்துவர்களிடம் மட்டும் பனைவெல்லம், சருக்கரை போன்றவை மருந்துச் சரக்காக அருகிய அளவில் பயன்பட்டன. கி.பி.பதினைந்தாம் நூற்றாண்டில்தான் கரும்பு, கொலம்பசின் முயற்சியால் அமெரிக்காவுக்கு அறிமுகமாகியது.

ஆத்திரேலியாவின் வடகீழ்த்திசையிலுள்ள நியூகினியாத் தீவிலும் சாலமன் தீவிலும் கரும்பு இயற்கையாகவே பயிராகியது என்பர். சேரமன்னரின் கிளை மரபினனான அதியமானின் முன்னோன் கடல்கடந்து நெடுந்தொலைவு சென்று பெறற்கரிய கரும்புப் பயிரைக் கொணர்ந்து தமிழகத்திலும் அடுத்துள்ள பகுதிகளிலும் பரப்புதற்கு வழிகோலினன் என்னும் வரலாற்றுச் செய்தி

"அரும்பெறல் மரபின் கரும்பிவண் தந்து
நீரக விருக்கை ஆழி சூட்டிய
தொன்னிலை மரபினின் முன்னோன் போல" (புறம். 99)

என்னும் புறப்பாடலால் தெளிவாகிறது.

தொல்பழங்காலச் சேர இளவரசர்கள் தம் கடற்பயணத்தின் போது எதிர்பாராமல் புதிது கண்டுபிடிக்கும் ஆற்றலுடையவராய் இருந்தனர் என்பதற்குச் சான்றான ஈழத்துத் தொல்கதையைத் தழுவி serendipity (எதிர்பாராமல் புதிது காணல்) என்னும் ஆங்கிலச் சொல் படைக்கப்பட்டுள்ளது.

*Serendipity*—the faculty of making happy chance finds. (Serendip, a former name fore Ceylon. Horace walpole coined the word (1754) from the title of the fairy-tale "The Three Princes of Serendip" 'whose heroes' "were always making discoveries by accidents and sagacity, of things they were not in a quest of".)

(Chambers Twentieth Century Dictionary)

ஆத்திரேலியாவை யடுத்ததும் இயற்கையாகவே உலகில் முதன்முதல் கரும்பு விளைந்ததாகக் கருதப்படுவதுமான சாலமன் முதலிய தீவுகளில் வாழும் பழங்குடி மக்கள் தம் முன்னோர் கரும்பிலிருந்து தோன்றியதாக நம்புவது, கரும்பு காரணமாக அங்குக் குடியேறிய முன்னோர் வரலாற்றை உட்கொண்டிருக்கும் எனக் கருதப்படுகிறது.

தென்கிழக்காசிய நாடுகளிலுள்ள பழங்குடிகளின் மொழிகள் தமிழோடு தொடர்புடையன என ஆய்வாளர் கூறிவருவதும் தமிழ்

முன்னோரே முதன்முதல் கரும்பு கண்டுபிடித்துப் பரப்பியவர் என்பதற்குச் சான்றுகிறது.

சருக்கரை, நாட்டுச்சருக்கரை, வெல்லம் ஆகியன செய்ய உதவும் கரும்பு மருத்துவத்திற்கும் பயன்படுகிறது. குருதியைத் தூய்மைப்படுத்தவும், இருமல், பித்தம் தணிவிக்கவும் பசிமிகுவிக்கவும் கரும்பஞ்சாற்றை ஏலங்கலந்து பருகுவர்.

Sugar-cane is found only in moist places. Stalk 6-12 feet high (Indian varieties) and it consists of several varieties white red and yellow and sometimes purple in some places. Juice is pressed from this and sugar is prepared. The considerable portion of the molasses or the treacle derived from it is known as jaggery.

The root of the sugar-cane is considered demulcent and diuretic. The stalk is cut into small pieces and chewed for its juice. The products or preparations from the sugar-cane consist of different kinds viz—cane sugar i.e., course brown sugar, white sugar, sugar-candy and jaggery. The properities of these preparations are mostly those of the sugar-cane.

The juice is highly nutritious and mixed with powdered cumin seeds and cardamon, it is a good remedy for cough, dullness of appetite and biliousness. It is also said to purify the blood and the urinary tract. Paper is manufactured from sugar-cane pith.

Sugar-cane was introducted in Europe by the Saracens during the time of the crusades, but for a long time it was unknown to the Greeks and Latins.

பழமொழிகள் :

*கரும்பிருக்க இரும்பைக் கடிக்கலாமா?*
*கரும்பென்றால் வாயினிக்குமா?*
*கரும்பு தின்னக் கூலி வேண்டுமா?*

தொண்டை நாட்டு ஊணூரில் வாழ்ந்த கரும்பன் என்னும் வள்ளல் தன் தோட்டத்திலுள்ள கரும்பை எவரும் வந்து நாணாது தின்னுக என யாவரையும் அழைத்தபோது, சிலர் மறுக்க அவர்க்குக் கூலி கொடுத்து அழைத்தருத்தினன் என்றும், 'கரும்பு தின்னக் கூலி' என்னும் பழமொழி இவனால் வந்தது என்றும் கூறுவர்.

———

# "நேர், நிரை, நேர்பு, நிரைபு, ஆகிய அசைகளின் அலகுகள்"

[சுந்தரசண்முகனார், புதுச்சேரி]

(பரல் அ, ௬௪௰ஆம் பக்கத் தொடர்ச்சி)

நேர்பு, நிரைபு ஆகிய அசைகளாக உள்ள சொற்களில், இறுதி எழுத்தாகிய குற்றுகரத்துக்கு முன்னே உள்ள நெடில் இயற்கைக்குமேல் சிறிது நீண்டு ஒலிக்கப்படும் என்பதற்கும், அக் குற்றுகரத்துக்கு முன்னே உள்ள ஒற்று இயற்கைக்குமேல் சிறிது அழுத்தம் பெற்று ஒலிக்கப்படும் என்பதற்கும், அந்த அந்தச் சொல்லிலேயே அகச்சான்று அமைந்து கிடக்கிறது. அஃதாவது :—

கட்டு, காடு, காட்டு—என்பன போன்ற நேர்பு அசைச் சொற்களும், மலடு, மலட்டு, மலாடு, மலாட்டு—என்பன போன்ற நிரைபு அசைச் சொற்களும், இறுதியில் குற்றியலுகர எழுத்து பெற்றிருப்பது காணலாம். உகரம் (உ) ஒரு மாத்திரை உடையது. குற்றியலுகரம் (மாத்திரை குன்றிய தன்மையுடைய உ) அரை மாத்திரையே உடையது. ஏன் இது அரை மாத்திரை குன்ற வேண்டும் எனில், குற்றுகரத்துக்கு முன்னால் உள்ள எழுத்துக்கள் நீண்டும் அழுத்தம் பெற்றும் மிகுந்த ஒலி முயற்சியைப் பெறுவதால், இறுதியில் உள்ள குற்றுகரத்துக்கு வரும்போது ஒலி முயற்சி தன்னில்தானே குறைந்துபோக, இது அரை மாத்திரை அளவே ஒலி பெறுகிறது. குற்றுகரம் தோன்றிய வரலாறு இதுவாகும். எனவே, நேர்பு, நிரைபு ஆகிய அசைச் சொற்களின் இறுதி எழுத்துக்கு முன்னால் உள்ள நெடில் நீண்டும் ஒற்று அழுத்தம் பெற்றும் ஒலிக்கப்படுவது இயல்பே.

இக் கொள்கையை வேறொரு கோணத்தில் நின்றும் நிறுவலாம். நகு, பசு, மடு, மது, தபு, மறு எனத் தனிக் குறிலின் பின் கு, சு, டு, து, பு, று வந்த சொற்களைக் குற்றியலுகரம் என்னாது, முற்றிய லுகரம் என்கிறோம். ஏனெனில், குற்றுகரத்துக்கு முன்னால் தனிக்குறில் இருப்பதால், குற்றுகரத்துக்கு முன்னால் மிகுந்த ஒலி முயற்சி தேவைப்படவில்லை; அதனால் இரண்டு எழுத்துக்களும் சமனாக ஒலிக்கப்படுகின்றன. எனவே, உகரம் மாத்திரை குன்றாமல் முழுமை பெறுகின்றது. முற்றிய லுகரத்தின் வரலாறு இதுவாகும். குற்றுகரமோ, தனிக் குறிலின்பின் நிற்காமல் வேறு

எழுத்துக்களுக்குப்பின் நிற்பதால், அவ்வெழுத்துக்கள் முதலில் மிக்க ஒலி முயற்சியை எடுத்துக்கொள்ள, குற்றுகரம் ஒலி குன்றி அப் பெயருக்கு உரியதாகிறது. எனவே, தனி நேர் அசை—நிரை அசைகளுக்கும், நேர்பு—நிரைபு அசைகளின் முற்பகுதியாக உள்ள நேர்—நிரை அசைக் கூறுகளுக்கும் வேற்றுமை உள்ளமை புலனாகலாம்.

ஆடு—புலி காயாட்டத்தில், காயை அந்தப் பக்கம் நகர்த்தினால் அந்தப் புலி வெட்டும்—இந்தப் பக்கம் நகர்த்தினால் இந்தப் புலி வெட்டும்—இந்த நிலையில், புலியைக் கட்ட மிகுந்த முயற்சி தேவைப்படும். இதுபோல, இளம்பூரணர் முதலியோரின் நான்கலகுக் கொள்கையை விளக்க மிகுந்த முயற்சி தேவைப்படுகிறது. இப்போது இங்கே இன்னொரு புலி வெட்டும்போல் இருக்கிறது. அஃதாவது :

குற்றுகர எழுத்தில் முடியும் நேர்பு—நிரைபு அசைச் சொற்களில், குற்றுகரத்துக்கு முன்னாலுள்ள எழுத்துக்கள் மிக்க ஒலி முயற்சியைப் பெறுவதால் குற்றுகரம் ஒலி குன்றுகிறது என்பதாக முன்னால் மொழியப்பட்டுள்ளது. அங்ஙனமெனில், முற்றுகர எழுத்தில் முடியும் நேர்பு—நிரைபு அசைச் சொற்களின் முன்னால் உள்ள எழுத்துக்களும் மிகுந்த ஒலி முயற்சி பெறுகின்றனவே—இந் நிலையில், இறுதி 'உகரம்' ஒலி குன்றாமல் முழுமையாய் நின்று முற்றுகரம் என்ற பெயருக்கு உரியதாய் இல்லையா? இந்த முரண்பாட்டுக்கு என்ன பதில்?—என்பதே, மாற்றுக் கொள்கையினர் நகர்த்தும் 'புலி'யாகும். நாம் இந்தப் புலியையும் கட்டியாக வேண்டும். இந்தப் புலியைக் கட்டுவதற்குத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் நமக்கு உதவி செய்துள்ளனர். ஈண்டு நச்சினார்க்கினியரின் உரைப் பகுதி வருமாறு :—

> "ஒரு மாத்திரை பெற்ற முற்றுகரம் நேர்பு அசை நிரைபு அசையாமோ வெனின், வண்டு—வண்டு—வண்டு—வண்டு—என்புழிப் பிறந்த அகவலோசை மின்னு—மின்னு—மின்னு—மின்னு—என்புழியும் பெறப்படுதலானும், வெண்பாட்டு ஈற்றடி 'வண்டு' எனக் குற்றியலுகர ஈற்றான் நின்றுழியும்—'கோலு' என முற்றுகர ஈற்றான் நின்றுழியும் ஒத்த ஓசையவாம் ஆகலானும், அவ் வசைகளாயின. இஃது,
>
> "எழுத்தள வெஞ்சினும் சீர்நிலை தானே
> குன்றலும் மிகுதலும் இல்லென மொழிப."
>
> (செய்யுளியல் - 43)

என்ற விதியாற் பெறுதும்."

என்பது உரைப்பகுதி. பேராசிரியரும் இதே கருத்தை வலியுறுத்தியுள்ளார். அவரது உரைப் பகுதி வருமாறு:—

"அஃதாக, முற்றுகரம் ஒரு மாத்திரை யாதலிற் குற்றெழுத்தாக்கி நேரும் நிரையுமாகப் பெருவோ வெனிற் பெரு; என்னை? வண்டு—வண்டு—வண்டு—என நின்ற வழிப் பிறந்த அகவல் ஓசை, மின்னு—மின்னு—மின்னு—மின்னு—என நின்ற வழியும் பெறப்படுமாதலின், அதுவும் அது பட்டதேபட்டு அவ் வசையே பெறும் என்றான் என்பது. அல்லதூஉம், வெண்பாட்டு ஈற்றடி 'வண்டு' எனக் குற்றுகர ஈற்றான் இற்றவழிக் 'கொல்லு' என முற்றுகர ஈற்றான் இறுமாயினும் ஒத்த ஓசையாம்.''

என்பது பேராசிரியரின் உரைப்பகுதி. உரையாசிரியர்கள் இருவரின் உரைப் பகுதிகளும் ஒன்றைப் பார்த்து ஒன்று எழுதப் பட்டது போலவே தோன்றுகின்றன. நேர்பு—நிரைபு அசைகளாக உள்ள சொற்களின் இறுதியில் இருக்கும் முற்றியலுகரமானது, குற்றியலுகரம்போலவே ஒலி குன்றி, அரை மாத்திரையாகிய ஒத்த ஓசை பெறும் என நச்சினார்க்கினியரும் பேராசிரியரும் திட்டவட்டமாகத் தெரிவித்துள்ளனர். எனவே, மாற்றுக்கொள்கையினர் நகர்த்திய கடைசிப் புலியும் கட்டப்பட்டுவிட்டது எனக் கருதலாம்.

இந்தச் செய்தியை அடிப்படையாகக் கொண்டு நோக்கின், குற்றியலுகரமும் முற்றியலுகரமும் பற்றிய விளக்கத்தை, முன்னோர் மொழிந்திருப்பதனினும், வேறு விதமாக மறு ஆய்வு செய்ய வேண்டி வரும். அது தனி ஆராய்ச்சியாகும். இப்போது இங்கு அது நமக்கு வேண்டியதில்லை.

ஒன்பது பொய் சொல்லி ஒரு பொய்யை மறைக்க முயல்வது போல, இளம்பூரணர் 'மொட்டைத்தாதன் குட்டையில் விழுந்தான்' என்றபடி சரியான எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கம் தராது மொட்டையாக மொழிந்துள்ள நான்கலகுக் கொள்கையை விளக்க நாம் படாதபாடு படவேண்டியுள்ளது. இளம்பூரணர் இவ்வளவு மொட்டையாக விட்டுப் போயிருக்கக் கூடாது. ஒருவேளை, அவர் காலத்தினர்க்கு, இஃது, எளிமையாய்த் தெரிந்த செய்தியாயிருக்கலாம்.

எனவே, மைசூர்பாகில் மைசூரைத் தேடுவதுபோல, நிரை அசையாக உள்ள ஒரு சொல்லில் இரண்டு அலகுகளையும், நேர்பு அசையாக உள்ள ஒரு சொல்லில் மூன்று அலகுகளையும், நிரைபு

அசையாக உள்ள ஒரு சொல்லில் நான்கு அலகுகளையும் தேடினால் —தேடிக் கொண்டே யிருக்கவேண்டியதுதான்—கிடைக்கமாட்டா. இரண்டலகு, மூன்றலகு, நான்கலகு—என்பவற்றுக்கு, இரண்டு வகையான அலகுகள்—மூன்று வகையான அலகுகள்—நான்கு வகையான அலகுகள்—என்றே பொருள் கொள்ள வேண்டும்.

எனவே, இதுகாறுங் கூறியவற்றால், நேரசை ஓரலகும் நிரை அசை ஈரலகும் நேர்பு அசை மூன்று அலகும் நிரைபு அசை நான்கு அலகும் பெறும் என முன்னோர் மொழிந்திருப்பதின் உட்கிடை இப்போது விளங்கலாம்.

குறிப்பு: வடமொழி இலக்கண வழியிலோ, இசை இலக்கண வழியிலோ அல்லது வேறு வழியிலோ, இந்த நான்கு அலகுக் கொள்கையைப் பொருத்தமாக விளக்கித் தெளிவுறுத் தினால் ஏற்றுக் கொள்ளத் தடையில்லை.

———

## உரைவேந்தர் புகழ் வாழ்க!

[தி. நா. அறிவு ஒளி., க. மு., கல். இ.,]

அற்றை உரையாளர் அத்தனை பேருமின்றோர்
ஒற்றைத் திருவுருவில் ஔவையாய் - உற்றாரோ
கற்ற தமிழ்க்கு உரை கண்டார்; கரைகண்டார்
நற்றமிழாம் அக்கடற்கு நன்று. (1)

நற்றிணை நல்லபுறம் நாடைங் குறுநூறு
கற்றற் கரிய பதிற்றுப்பத் - துற்றசிவ
நூலாம் ஞானமிர்தம் நூற்குரைகள் நன்றமைத்தார்
தோலா மொழிஔவை சூழ்ந்து. (2)

சேரர் வரலாற்றைச் சீராய் வரைந்தளித்தார்
வீரர் புகழெல்லாம் வீறோடு - பாரகத்தார்
கற்றுணரத் தந்த கலைவள்ளல் ஔவையின்
நற்றுணையைப் போற்றிடுவோம் நன்று. (3)

மன்னு உலகத்தில் மன்னும் தமிழ்ப்பணியே
தன்னார்வ மாயாற்றித் தாளாண்மை - மின்னாற்றல்
ஆய்வெடுத் தத் தாமாது வாழ்வெல்லாம் ஆற்றி எந்
தாய், கொடுத்தாய் இன்னுரைகள் சார்ந்து. (4)

திருவருட்பா தீஞ்சுவையைத் தெள்ளுரையால் தீட்டி
ஒருவருட் தொண்டை உயர்த்தித் - திருவருளாய்
இன்றொளிர்ந்த எம்மானே, எண்டிசையும் நின்புகழைப்
பொன் உரைகள் சொல்லும் புகழ்ந்து! (5)

# ஆட்சிமொழிக் காவலருக்குப் பல்கலைக்கழகப் பாராட்டு விருது

[கவிஞர் இரா. வைரமுத்து எம். ஏ.,]

1981 மார்ச்-14ஆம் நாள்—அஃது ஓர் இனிப்பு நாள்! அந்த நினைவுகளின் மணம், இன்னும் என் நெஞ்சில் கமழ்ந்து கொண்டேயிருக்கிறது. இமைகளை மூடிக்கொண்டால் இன்னும் அந்தக் காட்சிகள் வண்ணம்வண்ணமாக வலம் வருகின்றன. அன்று மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பெருமை பெற்றது. மு. வ. அரங்கில் முத்தமிழ் செழித்தது. அஃது என்ன திரு விழாவா? ஆமாம்! தீந்தமிழ்த்திருவிழா! தமிழ்த்தாய் தன் தலைமகனைப் போற்றிக் களித்த பொன்விழா! ஆமாம்! தமிழ்த் தாயின் தவமகனுக்கு—ஆட்சிமொழிக் காவலருக்கு—எண்பதாண்டு களில் அறுபது ஆண்டுகளை அன்னைத் தமிழுக்கே அள்ளித்தந்து விட்ட ஆன்றோருக்கு—நெருப்புத் தடைகடந்து இனிப்புத் தமிழ் வளர்த்த இனிய பெருமானுக்கு—தெருக்களின் நெற்றிகளில் தமிழ்த்திலகம் பொறித்த சான்றோராகிய அருந்தமிழ் அண்ணல் திரு. கீ. இராமலிங்கனார் அவர்களுக்கு மதுரை காமராசர் பல் கலைக்கழகம் 'பேரவைச் செம்மல்' என்ற விருது தந்து விருது பெற்ற நாள். இன்னும் அது நெஞ்சில் இனித்துக்கொண்டே யிருக் கிறது! ஆட்சிமொழிக் காவலரோடு வரலாற்றுப் பேறறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்களுக்கும், 'பேரவைச் செம்மல்' விருதினை, பல்கலைக்கழகம் பாராட்டி வழங்கியது.

தமிழ்நாட்டு நிதியமைச்சர் மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் அவர்கள் விழாவிற்குத் தலைமை ஏற்றார்கள். மாமதுரை மன்றத்தில் புலவர்களுக்குப் பொன்னளித்த பாண்டியன் நெடுஞ்செழியனின் மிடுக்கு, நாவலர் நெடுஞ்செழியனின் முகத்தில் நன்றாய்த் தெரிந் தது. பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் விருதுபெறும் செம்மல்களுக்கான தகுதியுரைகளை—வரலாற்றுச் சுருக்கம்போல் படித்துக் காட்டினார்.

விழா தொடங்கு முன்னர், அவை, குறைந்திருந்தது—விழா தொடங்கும்போது, அவை, நிறைந்திருந்தது—விழா, தொடங்கிய பின் அவை வழிந்திருந்தது.

கனத்துச்செழித்த ரோசாப்பூ மாலையொன்றை அமைச்சர் பெருந்தகை ஏந்திச் சுமந்துவந்து ஆட்சிமொழி ஏந்தலுக்குச் சூட்டினார். கதிரவன் வானவில்லைச் சுமப்பது போல் இருந்தது, ஆட்சிமொழிக் காவலர் பூமாலை அணிந்திருந்த பொற்கோலம்!

பட்டப் பெட்டகத்தை வாங்கித், தம் திருக்கைகளால் செம்மை செய்து நாவலர் அவர்கள் அவையின் ஆரவாரத்திற்கிடையே ஆட்சிமொழிக் காவலருக்கு அளித்தார்.

பொன்னுடை பிரித்துப் பூப்போலப் போர்த்தினர். பொற் பதக்கம் ஒன்றை அண்ணலுக்குச் சூட்டினர். ஆட்சிமொழிக் காவலரின் பொன்முகத்தில் ஓர் இளைய புன்னகை இழையோடியது.

விண்மீன்களை வைத்துத் தைத்த வெல்வெட்டுப் பையில், பொற்கிழியைப் பல்கலைக்கழகம் படைத்து வைத்திருந்தது. நான் காயிரம் வெண்பொற்காசுகளுக்கான காசோலையிட்ட பொற் கிழியினை, நற்றமிழ் நம்பிக்கு வழங்கினர் நாவலர் பெருமான். மாங்குடி மருதனுக்கு, பாண்டியன் நெடுஞ்செழியன் இப்படித்தான் பொன்னளித்துப் பூரித்திருப்பானோ என்று எண்ணியது என் இளமனம். அவ்வண்ணமே, வரலாற்றறிஞர் அவர்களுக்கும் வழங்கப்பட்டது.

நாவலர் பெருந்தகை தம் நீண்ட உரையில், ஆட்சிமொழிக் காவலரின் தமிழ்த்தொண்டு தமிழனைத் தலைநிமிரச்செய்த பாங்கினைச் சொல்லிச் சொல்லிச் சொக்கினர்; அந்தச் சொக்கன் திரு நகரையே சொக்கவைத்தார். இரு செம்மல்களும், ஏற்புரை நிகழ்த்தினர். 'வெல்லத் தமிழினி வாழும்' என்று நம்பிக்கை முரசறைந்தனர். பேராசிரியர் தமிழண்ணல் நன்றியுரை நவின்றார். அந்த நாள் நெஞ்சைவிட்டு அகலாதநாள்—அது தமிழன்னையின் பிறந்தநாள்!

## ஆட்சிமொழிக் காவலர்க்கு மதுரை காமராசர் பல்கலைக்கழகம் வழங்கிய தகுதி உரை

செங்கற்பட்டு மாவட்டத்துக் கீழைச்சேரி என்னும் ஊரில் 12—11—1899-இல் தீந்தமிழுக்குப் புகழும் பொலிவும் வலிவும் சேர்க்கத் தோன்றியவர் இராமலிங்கனர். இளங்கலை முதுகலைப் பட்டங்கள் பெற்று மேல்நிலை எழுத்தராய், எட்டாண்டு சார்பதி வாளராய், பதினொரு நகர்களில் பதினைந்தாண்டு நகராட்சி ஆணையராய்ப் பங்கீட்டு அலுவலராய், தொழிலாளர் நல்வாழ்வு அலுவலராய்ப் பணியாற்றி 1935இல் நகராட்சி ஆணையராக மாற்றம் பெற்றார். என்றுமுள தென்தமிழை யாண்டும் சென்றும் வென்றுமுள தமிழாகக் காண விரும்பிய இராமலிங்கனர் மணிக் கலம், பாலாசிரியர், சேமவச்சு, அவையம், புக்கில் முதலான இலக்கியத் தமிழுக்கு மறுவாழ்வுதந்தும், கட்டுபடி, கட்டுமானம், பண்டடை, அன்றாடம் என்றின்ன வழக்குச் சொற்களை உயர் வித்தும், சிறகம், பழம்படி, ஒருபூ, இறையிலி என்றினைய கல் வெட்டுத் தமிழைக் காலத்தமிழ்ப்படுத்தும், அமைச்சகம், வாய்ப் பகம், இயக்ககம், விழிப்புத்துறை, நகர்மை, ஊராட்சி, பேரூராட்சி, ஒன்றியம் என்று பன்னூறு கிளவிகளை ஆக்கியும், கோரெண்,

காலந்தேர், மேயர், பாங்கு, சேர்மன் என்ற அயல்மொழிச் சொற்களைத் தமிழ்வேராகப் புனைந்தும் ஆட்சிமொழித் தமிழை இலக்கணம் குன்று அகழி அமைத்து மரபுமாறு அரண் எடுத்து ஒலி பிறழா நொச்சி வேலி கண்டு மீட்சிப்படுத்தினர்.

மாநில ஆட்சிமொழித் தனியலுவலராகவும் தமிழறியாத தமிழக அலுவலர்கட்கு ஆட்சித்தமிழைப் பயிற்றும் ஆசிரியராகவும் மாநிலச் சட்டஆட்சிமொழி ஆணையம், அரசின் ஆட்சிமொழிக்குழு, தமிழ்ச் சொல்லாக்கமன்றம், தமிழகப்புலவர்குழு, சித்த மருத்துவத் தமிழ்ப் பாடநூல் ஆக்கக்குழு என்ற பல குழுமங்களில் உறுப்பினராகவும் அமர்ந்து, இடையறவும் நடையறவுமின்றிப் பணிபுரிந்த தமிழ்க் குறிக்கோளினர் இராமலிங்கனார்.

'சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல்' என்பது தமிழ்மொழியின் உயிர்நாடி என்று தெள்ளிதின் அறிந்த நம் ஆட்சி மொழிக்காவலர் ஆளுநர், மேலவர், பணியர், முகவர், தண்டலர், ஆட்சியர், இயக்குநர் என்று தனிச்சொல்லாக்கம் செய்தும், தமிழ் கூட்டு மொழியாதலின் பேருந்து மகிழுந்து பொதுவுந்து மூடுந்து எனவும் இணைச் செயலர் பிணைச் செயலர் துணைச் செயலர் உதவிச் செயலர் சார் செயலர் உள்முகச் செயலர் எனவும் தமிழகரமுதலிக்கு வளங் கண்டவர்.

'ஆட்சித்துறைத்தமிழ்' என்ற தன்னேரில்லாப் பெருநூலும் 'தமிழில் எழுதுவோம்' என்ற தளரா நம்பிக்கைக் கொள்கல நூலும் 'நகராட்சிமுறை' என்ற வழிகாட்டிக் குறிப்பும் தமிழ்நாடு ஞாயிறு மலரில் பகலவன் கதிர்போல் வெளிவந்த நூற்றுக்கு மேற்பட்ட ஆட்சிச் சொற்கட்டுரைகளும் தமிழன்னையின் புதுவுடைமைகள்; தமிழ்மக்களின் பொதுவுடைமைகள்.

சென்ற நூற்றாண்டிற் பிறந்து இந்நூற்றாண்டிற் பிறந்த நமக்கெல்லாம் வழிகாட்டி வாழ்ந்துவரும் தொண்டாற் பழுத்த பெரியவர் இராமலிங்கனார். தமிழே ஆட்சிமொழி என்ற துறையை வலுப்படுத்தியவர், உரம் ஊட்டியவர், தமிழக அரசின் கோட்பாட்டிற்குத் தோள்கொடுத்துத் துணை நின்றவர். உலகந்தோன்றிய நாள்தொட்டு ஞாலம் ஆண்டதமிழ் மீண்டும் ஆட்சிப்பேறும் காட்சிவீறும் பெறப் பிறப்பெடுத்த பெருமிதப் பெருமகனார் திரு கீ. இராமலிங்கனார்க்குத் 'தமிழ்ப் பேரவைச் செம்மல்' என்ற பட்டத்தினை வழங்கியும் தமிழ்ச் செம்மல்கள் பேரவையின் ஓர் உறுப்பினராக ஏற்றுக்கொண்டும் மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பாராட்டிச் சிறப்பிக்கின்றது.

---

# அகரமுதலிக்குச் சொற்றேகுக்கும் பணி - தமிழன்பர்களுக்கு வேண்டுகோள்

அமிழ்தினுஞ் சிறந்த நம் தமிழ்மொழிக்குச் சிறந்த சொற்பிறப்பியல் அகரமுதலி உருவாக்க மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் தலைமையில் அகரமுதலித் திட்டம் அரசினரால் தோற்றுவிக்கப் பெற்றது. அப் பணி நிறைவுறவும் தமிழ்மொழி வளரவும் சொல்வளம் பெருக வேண்டும். பழஞ் சொற்களை மீட்டமைத்தல், கலைச்சொற் படைத்தல், வட்டார வழக்குகளைத் தொகுத்தல், தொழிற் சொற்களைத் திரட்டல் ஆகிய பணிகளில் தமிழகம் முழுவதும் உள்ள தமிழன்பர்கள் ஈடுபட்டால் தமிழின் சொல்வளத்தைப் பெருக்கலாம்.

தமிழ் அகரமுதலியில் (Dictionary) இப்பொழுது ஓரிலக்கம் சொற்களே உள்ளன. ஆங்கிலத்தில் எட்டு இலக்கம் சொற்கள் உள்ளன. அனைத்து அறிவுத்துறைகளிலும், நம் அருமைத் தமிழ் ஆட்சி மொழியாக வேண்டுமெனின் தேனீக்களைப் போல் உழைத்துச் சொற்களைத் திரட்டும் பணியில் தமிழன்பர்கள் பலரும் ஈடுபடுதல் இன்றியமையாதது. தமிழுக்குச் செய்யும் தலையாய தொண்டு இது. வெப்ஸ்தர் (Webster) ஆங்கில அகரமுதலி தொகுக்கும்போது ஆங்கிலம் வழங்கும் 46 நாடுகளிலிருந்து சொற்களைத் திரட்டினர். ஆதலின் கீழ்க்கண்ட தலைப்புகளில் இன்றியமையாத புதிய சொற்களைத் திரட்டி எங்களுக்கு அனுப்ப வேண்டுகிறேம். இதுவரை அகரமுதலியில் இடம் பெறாத சொற்களைத் திரட்டி அனுப்புவோரின் பெயர்கள் அகரமுதலியின் கருவி நூல் மடலத்தில் இடம் பெறும். தாமே பலவிடங்களில் சொற்றேகுத்து இயலின் விளக்கக் குறிப்புகளும் தந்து அகரமுதலிப் பணிக்கு நிலையாக உதவுபவர்கள் பகுதிநேர அகரமுதலிப்பணித் தொண்டர்கள (Voluntary part - time workers) எனச் சிறப்பிடம் பெறுவர். மேனாடுகளில் அகரமுதலி தொகுப்பின்போது இத்தகையோர் 7000 பேர் அரும்பாடுபட்டுப் பெருந்தொண்டு செய்துள்ளனர்.

சொற்றேகுப்புகளை அனுப்பவேண்டிய முகவரி :

இயக்குநர் (பொறுப்பு),
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்ககம், அரசு அருங்காட்சியக வளாகம்,
எழுமூர், சென்னை - 600008.

சொற்றேகுத்தற்குரிய தலைப்புகள் :

1. வழக்கிழந்த தமிழ்ச்சொற்கள்.
2. நாட்டுப்புறத் தொழிற்சொற்கள்.
   (திணைவகை, பயிர் வகை, அவற்றின் நோய்கள், வேளாண்மை, நெசவு, மீன்பிடி தொழில், கட்டடக்கலை,

இரும்பு பொன் தொழில்கள், பிற சிறு தொழில்கள் தொடர்பான சிறப்புச் சொற்கள்).

3. வட்டார வழக்குகள்.
4. புதிய கலைச்சொற்கள்.
5. தமிழாக்கச்சொற்கள் (பிறமொழிகளிலிருந்து)
6. அச்சேறாத சுவடிகளில் உள்ள சொற்கள்.
7. செப்புப் பட்டயங்களில் உள்ள சொற்கள்.
8. கல்வெட்டுச் சொற்கள்.
9. மருத்துவச் செய்திகள் - நாட்டு மருத்துவச் சொற்கள்.
10. இனவகைச் சொற்கள் - பல்வகை மீன்களின் பெயர்கள், தின்பண்டங்கள், உணவு வகைகள், பல்வகை நெல்லின் பெயர்கள் போல்வன (வரிசை எண்ணிட்டுத் தொகுத்தல்).
11. மரஞ் செடி கொடிகள், விலங்கு பறவை, பூச்சிகள் ஆகிய வற்றுக்கும் அவற்றின் உறுப்புகளுக்கும் மாவட்டந்தொறும் வேறுபடும் பெயர்கள் - இயலின் அவற்றின் படம் வரைந்து பெயர் சுட்டலாம்.
12. இசைக் கருவிகள், பண் தொடர்பான சொற்கள் - அவற்றின் விளக்கங்கள்.
13. நாட்டியம், நாடகம், தொடர்பான சொற்கள் - கருவிகள், துணைப் பொருள்களின் பெயர்கள்,
14. மக்களின் இயற்பெயர்கள், குடும்பப் பெயர்கள் - பழந் தமிழ் மரபு சுட்டுவன.
15. பிறவகைச் சொற்கள் (நாட்டுப்பாடல், சிறுவர் பாடல், பழமொழிகளும் தொகுத்தனுப்பலாம்.)

எடுத்துக்காட்டு :

தொகுத்தவர் பெயரும் முகவரியும் :

| வ. எண் | சொல் | பொருள் | வழங்குமிடம் | வகை |
|---|---|---|---|---|
| 1. | நாளளத்தல் | முகூர்த்தம் கட்டுதல் | சேலம் மா. வ. (தாழ்த்தப் பட்டோர்) | வட்டார வழக்கு |
| 2 | தூவல் | பேனா | தமிழன்பர்கள் | தமிழாக்கச்சொல் |
| 3. | அம்மு(த)ல் | விற்றல் | ஆந்திர நாடு | வழக்கிழந்த தமிழ்ச் சொல் |
| 4. | கோண்ட குரவை (குன்றக்குறி) | ஒருவகை மலையாடு (மான் இனம்) | தருமபுரி மா. வ. | இனவகைச் சொல் |
| 5 | சரக்குந்து | லாரி | தமிழ்நாடு | கலைச் சொல். |

## திரு. அ. உத்தண்டராம பிள்ளை ஐ. ஏ. எசு. மறைவு

முன்னாள் இந்து அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையராகவும், அரசுத் துறையில் பல உயர் பதவிகளில் இருந்தவருமான உயர் திரு அ. உத்தண்டராம பிள்ளை அவர்கள் 1-5-81 அன்று தமது 76 ஆவது அகவையில், சென்னை மயிலையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

திரு. பிள்ளையவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒட்டப் பிடாரத்தில் 13-4-1905 இல் திரு. அய்யாசாமிப் பிள்ளை அவர்கட்கும், திருவாட்டி இலட்சுமி அம்மாள் அவர்கட்கும் திருமகனாய்த் தோன்றினார். தூத்துக்குடி கால்டுவெல் உயர்நிலைப் பள்ளியில், பள்ளிக் கல்வியை முடித்து, திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் பி. ஏ. பட்டக் கல்வியில் தேறிப் பின்னர் சட்டம் பயின்று பி. எல். பட்டம் பெற்றார்.



இவர் அரசுத் துறையில் 1930 இல் பணியேற்கத் துவங்கி, பலதுறைகளில் உயர்பதவிகள் பெற்று 1949 இல் இராமநாதபுர மாவட்ட ஆட்சியாளராகப் பொறுப்பேற்றார். அவ்வாண்டு அக்டோபரில் இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதிக்கு (I. A. S.) அமர்த்தப்பெற்றார். இங்ஙனம் பல பதவிகளைப் பெற்ற இவர், ஆந்திர மாநிலம் பிரிக்கப்பட்ட பின் 1953 இல் தென்னார்க்காடு மாவட்ட ஆட்சியாளராகவும், 1955 இல் இந்து அறநிலையத் துறை ஆணையராகவும் படிப்படியே உயர் பதவிகளைப் பெற்றார்.

இந்து அறநிலைய ஆணையராக இருந்த காலத்தில் இவர்கள்சமயத் துறையில் ஆற்றிய நற்பணிகள் மிகப்பல. தமிழ் நாட்டில் பல திருக் கோயில் திருப்பணிகளை நிறைவேற்றியுள்ளார். இந்துசமயத்தைப் பரப்புதற்காக 1958 இல் 'திருக்கோயில்' என்னும் அரசு திங்கள் இதழைத் தோற்றுவித்தவரும் இவரே.

இங்ஙனமெல்லாம் சமயத்திற்கும், குமுகாயத்திற்கும் அரும்பணிகள் பல ஆற்றி 1967 இல் ஓய்வு பெற்ற காலத்தினும் இவர்தம் ஆற்றல்களைப் பயன் கொள்ள விரும்பிய திரு. A. M. M. முருகப்பச் செட்டியார் அறக் கட்டளையினர், அத்துறையில் இவரை ஒரு தகைசான்ற செயலாளராக அமர்த்தினர். 1965 வரை அப்பொறுப்பினைச் செவ்வனே நிறை வேற்றிய இவர் தமது ஓய்வு நேரத்தில் இராமேசுவரம் போன்ற புகழ் பெற்ற திருத்தலங்கட்குப் புராணம், வழிகாட்டி ஆகியனவற்றை ஆங்கிலம், தமிழ் ஆகிய மொழிகளில் எழுதி வெளியிட்டார். இவருக்கு ஆண்மக்கள் மூவரும், பெண் மக்கள் இருவரும் உளர். ஆண்மக்கள் வழித் தோன்றல்களாகப் பேரன்மார் நால்வரும், பேத்தியர் இருவரும் உளர்.

இவ்வாறு புகழ் பெற வாழ்ந்த இப் பெரியார் கடந்த 1-5-81 இல் இறையடி எய்தினர். மறைந்த இப் பெரியாரின் குடும்பத்தார்க்கும் உற்றார் உறவினர்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# உயர்திரு வை. குஞ்சிதபாதம் பிள்ளை மறைவு

மறைமலையடிகளார் மருகரும், தருமையாதீனத் தமிழ்ப் புலவரும், ஓய்வு பெற்ற தமிழாசிரியருமான திரு வை. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் 20-4-81 அன்று தமது 74 ஆவது அகவையில் சென்னையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகின்றோம்.

திரு பிள்ளையவர்கள் தஞ்சை மாவட்டம் திருவாரூரையடுத்துள்ள காவாலகுடியில் தோன்றியவர். திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள் அமைத்திருந்த பள்ளியில் பாடநூல்களையும் தேவாரமும் பயின்றார். பின்னர்த் திருவையாற்றில் அரசர் கல்லூரியில் பயின்று தமிழ் வித்துவான் ஆனார். திருவையாற்றில் பயிலும்போது மறைமலையடிகளாரின் மகனார் மறை திருநாவுக்கரசுடன் நெருங்கிய நட்புப்பூண்டார்.



அடிகளாரின் உளம் கவர்ந்த இவர் அடிகளாரின் குடும்பத்தாருடனும் நெருங்கிப் பழகலானார். அடிகளார், குஞ்சிதபாதம் என்னும் இவரது பெயரைத் 'தூக்கிய திருவடி' என மாற்றி அமைத்தார். அத்துடன் திரு. பிள்ளை அவர்களின் தமிழ்ப் புலமை, சமயப் பற்று ஆகியவற்றைக் கண்டு உளமகிழ்ந்து தம் திருமகளார் திருவாட்டி திரிபுரசுந்தரியை அவருக்கு வாழ்க்கைத் துணைவியாக்கினர். இத் திருமணம் அடிகளார் தலைமையில் பல்லாவரத்தில் 1932இல் நடைபெற்றது.

திரு. குஞ்சிதபாதனார் சென்னை நூங்கம்பாக்கம் நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் தொடர்ந்து 35 ஆண்டுகள் தலைமைத் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

இவர்தம் துணைவியார் திருவாட்டி மூங்கரமுகியார் (திரிபுரசுந்தரி அம்மையார்) நுங்கம்பாக்கம் மாநகராட்சிப் பெண்கள் துவக்கப் பள்ளித் தலைமையாசிரியராக முப்பதாண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்றார்.

இவர்கட்கு மகள் ஒருவரும் ஆண் மக்கள் இருவரும் உள்ளனர். மூத்த மகனார் திரு. ஆளுடைய பிள்ளை கல்லூரிப் பேராசிரியராகவும் முதல்வராகவும் இணை இயக்குநராகவும் பணியாற்றிப் பின்னர் ஐ. ஏ. எசு பணிக்குத் தேர்வு பெற்றுத் தற்போது போக்குவரத்து இணை ஆணையராகப் பொறுப்பேற்றுள்ளார். இளைய மகனார் டாக்டர் நம்பி ஆரூரன் மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தின் அஞ்சல் வழிக் கல்வித் துறையில் வரலாற்றுப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். மகளார் திருவாட்டி தாமரைச் செல்வி, குடந்தைத் தொடர் வண்டி நிலையத் தலைவரை மணந்து வாழ்கிறார்.

இங்ஙனம் வாழ்வாங்கு வாழ்ந்த இப் பெரியாரை இழந்து வருந்தும் இவர்தம் குடும்பத்தார்க்கும், உற்றார் உறவினர்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

———

# செய்திகளும் குறிப்புக்களும்

## தமிழறிஞர்களுக்குப் பாராட்டு விழா

20--4--81 அன்று மாலை சென்னைத் தொடர்வண்டித் துறைச் சிற்றுண்டி விடுதியில் முனைவர் ச. வே. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் தமிழறிஞர்கட்குப் பாராட்டு விழா நடைபெற்றது சங்க நூல்களை ஆங்கில ஆக்கம் செய்த திருவாளர்கள் அ. வெ. சுப்பிரமணியம், வே. சாரங்கபாணி ஆகியோரைப் பாராட்டி முனைவர் ஔவை நடராசன், நக்கீரனார், சை. சி. நூற்பதிப்புக் கழகப் பொது மேலாளர் இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்., எஸ். இராம் மோகன் ஆகியோர் உரையாற்றினர்.

## மணவழகர் மன்ற வெள்ளிவிழா

திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் புகழோங்கத் தொடங்கப் பெற்ற மணவழகர் மன்ற வெள்ளிவிழா 'கலைவாணர்' அரங்கத்தில் 8, 9, 10—5—81 ஆகிய நாட்களில் டாக்டர் முத்தமிழ்க் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதன் அவர்கள் தலைமையில் மிகவுஞ் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. இம் மன்றம் தற்போதைய உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி மாண்பமை பு. ரா. கோகுலகிருட்டிணனவர்களால் தொடங்கப்பெற்று இப்போது இதன் காப்பாளராக இருந்து வருகின்றனர். திரு. வி. க. அவர்கள் வாழ்க்கைக் குறிப்புக்கள் மூன்றுவது பதிப்பு இப்போது கழகவழி அச்சிடப் பெறுகிறது.

## திருவாவடுதுறை ஆதீன இளவரசுக்கு வரவேற்பு

திருவாவடுதுறை ஆதீனத்தின் இளவரசுப் பட்டம் ஏற்றுள்ள ஸ்ரீ. சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதிகள் அவர்கட்கு 9—5—81 அன்று திருநெல்வேலி வர்த்தகர் பலர் தர்ம பரிபாலன சங்கம் வரவேற்பளித்துச் சிறப்பித்தது.

## இலெமூரியா நினைவு இயக்கம்

உலகத்தின் முதல் மாந்தன் பிறந்தகம் குமரிக்கண்டம் எனப் படும் இலெமூரியாக்கண்டம். இக் கண்டத்தில் உருக்கொண்ட திராவிட நாகரிகமே அனைத்துக்கும் அடிப்படை என்பதை வெளிப்படுத்த, பெங்களூரில் ஓர் இயக்கம் தோற்றுவிக்கப்பெற்றுள்ளது. இவ் வியக்கத்தின் தொடர் விழா 23—4—81 அன்று பெங்களூர் அலசூரிலுள்ள மறைமலையடிகள் நூல் விற்பனையகத்தில் திரு. குணா அவர்கள் தலைமையில் நடைபெற்றது. பேரா. கு. பூங்காவனம், ச. நடராசன். நா. தென்னவன் ஆகிய அறிஞர்கள் சிறப்புரை ஆற்றினர். இவ் வியக்கத்திற்கு ஆக்கமளிக்குமாறு தமிழ் அன்பர்களையும் அறிஞர்களையும் இவ் வியக்கத்தின் அமைப்பாளர் திரு. அழகுவேலர் கேட்டுக் கொள்ளுகிறார்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு, ருரு–கூஎரு ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. | வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ. 10—00 |
| ,, | ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | 5–00 |
| ,, | A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | 5—00 |
| ,, | மு. சுவாமிநாதன், சென்னை. | 5—00 |
| ,, | சிவ. சு. வேலையா பிள்ளை அவர்கள், நாகர்கோவில் (துணைவியார் முத்தம்மை, நினைவின்பொருட்டு) | 15 00 |
| ,, | பு. க. கங்காதரன், துணைப்பேராசிரியர், அரசுக்கல்லூரி, கிருட்டிணகிரி | 25 00 |

# மதிப்புரை

## இசைத்துறைத் தமிழ்ச்சொற்கள்

[ஆக்கியோன்: வி. ப. கா. சுந்தரம், தமிழ்ப் பேராசிரியர், தமிழ் நாடு இறை இயல் கல்லூரி, மதுரை, விலை: ரூ 3-50]

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது, தமிழகப் புலவர் குழுவின் சார்பில், முத்தமிழ்க் காவலர் முனைவர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது இந்நூல். வடமொழியின் வல்லாண்மை இசைத் துறையிலும் புகுந்து இசையை 'சங்கீத'மாக்கி, தமிழுக்கென இசை உண்டா என்று ஐயப்படுமளவிற்கு வளர்ந்துவிட்டிருக்கும் இவ் வேளையில் இப்படிப்பட்டதொரு நூல் வெளிவந்திருப்பது வியந்து பாராட்டத்தக்கது. இசைக் கல்லூரிகளில் வழங்கும் வடசொற்களுக்கு உரிய இசைத்துறைத் தமிழ்ச் சொற்களைத் தொகுத்தளிக்கிறார் இந் நூலாசிரியர். 'சப்தஸ்வரங்கள்' எனப்படும் ஏழு கோவைகள் பற்றியும், பண்கள் (இராகம்) பற்றியும் தாளங்கள் பற்றியும் இந் நூலில் விளக்கப்படுகின்றன. இசை ஆர்வமும் தனித் தமிழ்ப் பற்றுமுடைய அன்பர்கட்கு இந் நூல் நன்கு பயன்படும்.

## தமிழ் யாப்பு—சில புதிய கோணங்கள்

ஆசிரியர்: டாக்டர் கு. மோகனராசு, B.Sc., M.A., Ph.D. D. Anth., D. Geog., D.H.Ed., Cert - Skt, சென்னைப் பல்கலைக் கழகம். வெளியீடு: வள்ளுவர் கழகம், சென்னை. விலை: ரூ 7-00]

இந் நூல் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் நடைபெற்ற ஆசிரியர் மாணவர் கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகளுள் ஆறு கட்டுரைகளின் தொகுப்பாகும். வண்ணப் பா யாப்பில் எழுத்தும் சந்தமும்; அசையும் பொருளும்; வெண்பாவில் ஓரசைச் சீர்கள்—ஓர் அகம் ஆய்வு, திருக்குறளில் தலையாகு எதுகைகள்; குறள் வடிவமும் வள்ளுவர் நோக்கமும்; ஆத்திசூடியின் அமைப்பு முறை என்னும் தலைப்புக்களில் தம்முடைய ஆராய்ச்சிகளை வெளியிட்டுள்ளார் இந் நூலாசிரியர். இலக்கண ஆராய்ச்சியாளர்க்குப் பயன் தரும் நூல்.

## ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய சின்னம்பேடு என்கிற சிறுவாபுரித் திருப்புகழ்கள்

[உரையாசிரியர்: நல். முருகேச முதலியார். அருள்மிகு சின்னம்பேடு பாலசுப்பிரமணிய சுவாமி திருக் கோயில் வெளியீடு.

கிடைக்குமிடம்: அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி, சின்னம்பேடு திருக்கோயில் நிர்வாகி, சின்னம்பேடு அஞ்சல். பொன்னேரி வட்டம், செங்கை மாவட்டம்.]

சின்னம்பேடு திருத்தலத் திருப்புகழ்ப் பாக்கள் நான்கிற்குத் திரு. நல். முருகேச முதலியார் அவர்கள் சிறந்த உரை எழுதியுள்ளார்கள். அவர்தம் முன்னுரையில் இத்தல புராண வரலாறும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அறநிலையத் துறை ஆணையாளர் திரு. யு. சுப்பிரமணியன், ஐ. ஏ. எசு. அவர்களின் சீரிய அணிந்துரையுடன் கூடியது. முருக அன்பர்கட்குப் பயன்படக்கூடிய வெளியீடு.

---

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.

## கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| ஐந்தாவது தமிழ் மாநாடு—சாலை இளந்திரையன் | 5 | 00 |
| யோகாசன முறையில் வைத்தியம்—யோகி. என். ராஜன் | 6 | 50 |
| எழுத்தும் அச்சும்—மா. சு. சம்பந்தன் | 5 | 00 |
| திருப்தியாய் இருப்பது எப்படி?—மு. முத்துக்காளத்தி | 4 | 00 |
| தமிழ் இலக்கியக் கொள்கைகள் - டாக்டர் ச. வே. சுப்பிரமணியம், டாக்டர் கடிகாசலம் | 16 | 00 |
| காவியப் பரிசு—ரகுநாதன் | 6 | 50 |
| மனைநூல்- பூ. சுப்பிரமணியம் | 15 | 00 |
| குறைந்த முதலில் குடிசைத் தொழில்கள் —எஸ். ஏ. துரைராஜா | 3 | 00 |
| அறிவைத் தேடி—அறிவியலறிஞர்கள் பலர் கட்டுரைகள் | 18 | 50 |
| மனதுக்குத் தூக்கமில்லை—கண்ணதாசன் | 9 | 00 |
| திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு —ந. கல்யாண சுந்தரம், எம், ஏ., பி. எச்டி. | 25 | 00 |
| பாரதியும் கடவுளும்—பெ. தூரன் | 11 | 00 |
| சிவானந்த நடனம்—ஆனந்த குமாரசாமி | 17 | 00 |
| ராணி மங்கம்மாள்—நா. பார்த்தசாரதி | 10 | 50 |
| பொது அறிவுக் களஞ்சியம்—சம்பந்தம் | 21 | 50 |
| காப்பியக் கருத்தோட்டங்கள்—முத்துராசன் | 17 | 00 |
| தமிழகத்தில் மார்க்கோபோலோ இப்னுபதூதா —எம். ஐ. மரைக்காயர் | 5 | 00 |
| Convention and Greetings in Sangam Love lyrics —A. V. Subramanian | 6 | 00 |
| New light on the Early History of Tamil nadu —V. T. Chellam | 10 | 00 |
| The Squirel in the Court yard—A. V. Subramaniam | 13 | 00 |
| The Ten Decades ,, | 12 | 00 |
| Festivals of Tamil Nadu—N. Arunachalam | 40 | 00 |
| Language and Grammar—S. V. Subramanian —K. M. Irulappan | 22 | 00 |
| ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர் | 50 | 00 |

பதிவஞ்சலில் அனுப்பும் செலவு ரூ. 5.00 ஆக ரூ 55/-ஐ முன் பணமாக அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம்.

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்,
79, பிரகாசம் சாலை (பிராட்வே) சென்னை-1.

பதிவு எண் M 4899.



அப்பர் அச்சகம், சென்னை-1.